# حصن المسلم

سلسلة مؤلفات سعيد بن علي بن وهف القحطاني

## ஹிஸ்னுல் முஸ்லிம்

அரபி மூலம்: சயீது பின் அலீ பின் வஹ்ஃப் அல் கஹ்தானீ

**தமிழிலில்: அஷ்-ஷைக்: ஓ. முஹம்மத் இக்பால் மதனீ**

بسم الله الرحمن الرحم

### فَضْـلُ الذِّكْـر

### நினைவு கூர்வதன் சிறப்பு

உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான் :

قَالَ اللَّهُ تَعَالَى:(فَاذْكُرُونِي أَذْكُرْكُمْ وَاشْكُرُواْ لِي وَلاَ تَكْفُرُونِ)

நீங்கள் என்னை நினைவு கூருங்கள், நானும்உங்களை (அருள் புரிந்து) நினைவு கூர்வேன்
அல்பகரா அத்தியாயம், வசனம்: 152.

(يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا اذْكُرُوا اللَّهَ ذِكْراً كَثِيراً)

விசுவாசங்கொண்டோரே! அல்லாஹ்வை அதிகமான நினைவு கூருங்கள்.
அல்அஹ்ஜாப் அத்தியாயம், வசனம்: 41.

(وَالذَّاكِرِينَ اللَّهَ كَثِيراً وَالذَّاكِرَاتِ أَعَدَّ اللَّهُ لَهُم مَّغْفِرَةً وَأَجْراً عَظِيماً)

அல்லாஹ்வை அதிகமாக நினைவு கூர்பவர்களான ஆண்களும், (அல்லாஹ்வை அதிகமாக) நினைவு கூர்பவர்களான பெண்களும் - (ஆகிய) இவர்களுக்கு, அல்லாஹ் மன்னிப்பு மற்றும் மகத்தான (நற்) கூலியை தயார் செய்து வைத்திருக்கிறான்.
அல்அஹ்ஜாப் அத்தியாயம், வசனம்: 35.

(وَاذْكُر رَّبَّكَ فِي نَفْسِكَ تَضَرُّعاً وَخِيفَةً وَدُونَ الْجَهْرِ مِنَ الْقَوْلِ بِالْغُدُوِّ وَالآصَالِ وَلاَ تَكُن مِّنَ الْغَافِلِينَ)

(நபியே!) உம் மனதிற்குள் மிக்க பணிவோடும், பயத்தோடும் (மெதுவாக) சொல்லில் உரத்த சப்தமின்றி காலையிலும், மாலையிலும் உமதிரட்சகனை நினைவு கூர்வீராக! (அவனை) மறந்திருப்போரில் நீர் ஆகி விடாதீர்! அல்அஃராஃப் அத்தியாயம், வசனம் :205.

மேலும் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: "தன்னுடைய இரட்சகனை நினைவு கூறுகின்றவர் மற்றும் தன்னுடைய இரட்சகனை நினைவு கூறாதவருக்கு உதாரணம் :உயிருள்ளவர் மற்றும் உயிரற்றவைப் போன்றதாகும்'. ஃபத்ஹுடன் புகாரீ 11/208, இன்னும் முஸ்லிமில்,

"எதில் அல்லாஹ்வை நினைவு கூறப்படுகின்றதோ அத்தகைய வீடு மற்றும் எதில் அல்லாஹ்வை நினைவு கூறப்படவில்லையோ அத்தகைய வீட்டிற்கு உதாரணம்: உயிருள்ளவர் மற்றும் உயிரற்றவரைப் போன்றதாகும்", என்ற வாக்கியத் தொடரில் பதிவாகியுள்ளது. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "உங்களுடைய செயல்களில் மிகச் சிறந்ததைப் பற்றி, உங்களுடைய அரசனிடத்தில் அவற்றில் மகவும் பரிசுத்தமானதுபற்றி, தங்கம் மற்றும் வெள்ளியை செலவு செய்வதை விட உங்களுக்கு மிகவும் சிறந்ததைப் பற்றி உங்களுடைய எதிரிகளை (போர்க்களத்தில்) நீங்கள் சந்தித்து அவர்களுடைய கழுத்துக்களை நீங்கள் வெட்டி, அவர்களும் உங்களுடைய கழுத்துக்களை வெட்டுவதை விட மிகவும் சிறந்ததைப் பற்றி உங்களுக்கு நான் தெரிவிக்க வேண்டாமா?' எனக் கேட்டார்கள்; அ(தற்க)வர்கள், ஆம்! எனக் கூறினார்கள்; அ(ப்போத)வர்கள், 'அல்லாஹ்வை நினைவு கூறுதல் எனக் கூறினார்கள்.
நூல்கள் : திர்மிதீ 5/459, இப்னுமாஜா 2/1245 ஸஹீஹ் இப்னுமாஜா 2/316.
ஸஹீஹ் அத்திர்மிதீ 3/139 காண்க!

மேலும் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்: நான், என்னுடைய அடியான் என்னைப்பற்றி எண்ணுகின்ற விதத்திலாவேன்; என்னை அவன் நினைவு கூறுகின்ற போது அவனுடன் உள்ளேன். அகவே, அவன் என்னை தன் மனதில் நினைவு கூர்ந்தால், என்னில் நான் அவனை நினைவு கூறுவேன்; இன்னும் ஒரு கூட்டத்தில் என்னை அவன் நினைவு கூர்ந்தால் , அவர்களை விட மிகச்
சிறந்த கூட்டத்தில் அவனை நான் நினைவு கூறுகிறேன்; இன்னும், அவன் என்பால் ஒரு ஜான் நெருங்கினால் அவனின்பால் ஒரு முழம் நான் நெருங்கி விடுகிறேன்; மேலும், அவன் என்பால் ஒரு முழம் நெருங்கினால், அவனின்பால் ஒரு பாகம் நான் நெருங்கி விடுகிறேன், அவன் என்பால் நடந்து வந்தாலோ, அவனின்பால் நான் ஓடி வருகிறேன்.
நூல்கள் : புகாரீ 8/171, முஸ்லிம் 4/2061. இவ்வாக்கியத் தொடர் புகாரிக்குரியதாகும்.

அப்துல்லாஹ் பின் புஸ்ர் அறிவிக்கிறார்கள்: நிச் சயமாக ஓர் ஆடவர், "அல்லாஹ்வின் தூதர் அவர்களே! நிச்சயமாக இஸ்லாத்தன் சட்ட திட்டங்கள் என் மீது - என்னைப் பொருத்தவரை - மிகுதியாகிவிட்டன, ஆகவே, எதை நான் ஒழுகிப் பிடிக்க வேண்டுமோ அக்காரியத் தைப் பற்றி எனக்கு நீங்கள் அறிவித்துத் தாருங்கள்" எனக் கேட்டார், அ(தற்க)வர்கள், "உம்முடைய நாவானது அல்லாஹ்வை நினைவு கூறுவதால் ஈரமானதாகவே இருக்க வேண்டும்" என்று கூறினார்கள்.
நூல்கள் : திர்மிதீ 5/458, இப்னுமாஜா 2/246, ஸஹீஹ் அத்திர்மிதீ 3/139, ஸஹீஹ் இப்னுமாஜா 2/317 காண்க!
மேலும் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: "எவர் அல்லாஹ்வுடைய வேதத்திலிருந்து ஒரு எழுத்தை ஓதுகிறாரோ, அவருக்கு அதற்காக ஒரு நன்மையுண்டு ; இன்னும் நன்மை அது போன்றவற்றின் பத்தாகும்; அலிஃப், லாம், மீம் என்பதை ஒரு எழுத்தென்று நான் கூறவில்லை; எனினும் அலிஃப் ஒரு எழுத்து, லாமும் ஒரு எழுத்து, மீமும் ஒரு எழுத்தாகும்"
நூல்கள் : திர்மிதீ 5/175, ஸஹீஹ் அத்திர்மிதீ 3/9, ஸஹீஹ் அல்ஜாமி உஸ்ஸகீர் 5/340ம் காண்க!

மேலும், உக்பா பின் ஆமிர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவித்துக் கூறுகிறார்கள்: நாங்களோ திண்ணையில் இருக்க அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் புறப்பட்டு வந்து, "ஒவ்வொரு நாளிலும் பத்ஹாவின்பால் அல்லது அகீகின்பால் அதிகாலையில் புறப்பட்டுச் சென்று, பாவம் மற்றும் இரத்த சொந்தத்தைத் துண்டிப்பது அன்றி இரு கொழுத்த ஒட்டகங்களை அங்கிருந்து கொண்டு வர உங்களில் விரும்புவர் எவர்" எனக் கேட்டார்கள்; (அதற்கு) "அல்லாஹ்வின் தூதர் அவர்களே! அதை நாங்கள் விரும்புகிறோம்" என்று கூறினோம்; அ(தற்க)வர்கள்,"உங்களில் ஒருவர் அதிகாலையில் பள்ளிக்குப் புறப்பட்டுச் செல்ல வேண்டாமா? (அவ்வாறு சென்று) கண்ணியம் மற்றும் மகத்துவத்திற்குரிய அல்லாஹ்வின் வேதத்திலிருந்து இரண்டு வசனங்களை (கற்று) அறிந்து கொள்வார் அல்லது ஓதிக் கொள்வார். (அவ்வாறு அவர் செய்வதானது) இரண்டு ஒட்டகங்களை விட அவருக்கு மிகச் சிறந்ததாகும்; (வசனங்களில்) மூன்று (ஒட்டகங்களில்) மூன்றை விட மிகச் சிறந்ததாகும்; (வசனங்களில்) நான்கு (ஒட்டகங்களில்) நான்கை விட மிகச் சிறந்ததாகும், ஒட்டகத்திலிருந்து அவற்றின் எண்ணிக்கைகள் அளவிற்கு உண்டு என்று கூறினார்கள்".
நூல்: முஸ்லிம் 1/553.

மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: எவர் ஓர் அமர்விடத்தில் அமர்ந்து விட்டு அதில் அல்லாஹ்வை நினைவு கூறவில்லையோ, அவரின் மீது அல்லாஹ்விடமிருந்து அது ஒரு இழப்பாக இருக்கும். இன்னும், எவர் படுக்கையில் படுத்துக் கொண்டு அதில் அல்லாஹ்வை நினைவு கூறவில்லையோ அவரின் மீது அல்லாஹ்விடமிருந்து அது ஒரு இழப்பாக ஆகிவிடும்.
நூல்கள்: அபூதாவூது 4/264, மற்றும் அழ்ல்லாதவை இன்னும் ஸஹீஹ் அல்ஜாமிஉ 5/342ல் காண்க!

மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: ஒரு கூட்டத்தார் எந்த ஓர் அமர்விடத்திலும் அமர்ந் துவிட்டு அதில் அல்லாஹ்வை அவர்கள் நினைவு கூறவில்லை மற்றும் தங்களுடைய நபியின் மீது ஸலவாத்தும் கூறவில்லை, அது அவர்களுக்கு இழப்பாக இருந்தல்லாது இல்லை; ஆகவே, அவன் நாடினால், அவர்களை அவன் தண்டித்து விடுவான்; அவன் நாடினால் பாவம் பொருத்தருளவும் செய்வான்.
நூல்கள்: திர்மிதீ மற்றும் ஸஹீஹ் அத்திர்மிதீ 3/140ல் காண்க!

மேலும் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: அமர்விடத்திலிருந்து ஓர் கூட்டத்தார் அதில் அல்லாஹ்வை நினைவு கூறாது எழுந்து விடுவது கழுதையின் சவம் போன்றதை விட்டும் அவர்கள் எழுந்தவர்களாக அல்லாது இல்லை. அவர்களுக்கு அது கைசேதமாகவுமிருக்கும்.
நூல்கள்: அபூதாவூது 4/264 மற்றும் அஹ்மது 2/389, ஸஹீஹுல் ஜாமிஉ 5/176ம் காண்க!

## 1 - أَذْكَارُ الاسْـتِيقَاظِ مِنَ النَّـومِ

## 1. தூக்கத்திலிருந்து விழித்துக் கூறப்படும் துஆ

1-(1) ((الْحَمْدُ لِلَّهِ الَّذِي أَحْيَانَا بَعْدَ مَا أَمَاتَنَا، وَإِلَيْهِ النُّشُورُ))

(1) அல்ஹம்து லில்லாஹில்லதீ அஹ்யானா பஃத மா அமாதனா வஇலைஹின் னுஷுர்.

பொருள்: நம்மை மரணிக்கச் செய்த பின் நமக்கு உயிர் கொடுத் தவனாகிய அல்லாஹ்விற்கே புகழ் அனைத்தும் உரித்தாகுக!
ஃபத்ஹுடன் புகாரீ. பாகம் 11, பக்கம்:113, முஸ்லிம், பாகம்:4, பக்கம்:2083.

2-(2) ((لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ، لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ، وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ، سُبْحَانَ اللَّهِ، وَالْحَمْدُ لِلَّهِ، وَلاَ إِلَهَ إِلاَّ اللَّهُ، وَاللَّهُ أَكبَرُ، وَلاَ حَوْلَ وَلاَ قُوَّةَ إِلاَّ بِاللَّهِ الْعَلِيِّ الْعَظِيمِ، رَبِّ اغْفِرْ لِي))

(2) லா இலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீக லஹு, லஹுல் முல்கு வலஹுல் ஹம்து, வஹுவ அலா குல்லி ஷையின் கதீர். ஸுப்ஹானல்லாஹி வல்ஹம்து லில்லாஹி வலாயிலாஹ இல்லல்லாஹு, வல்லாஹு அக்பர், வலா ஹவ்ல வலா குவ்வத இல்லா பில்லாஹில் அலிய்யில் அழீம், ரப்பிஃக்ஃபிர்லீ.

குறிப்பு : தூங்கி விழித்து இதை எவர் கூறுகிறாரோ, அவருக்கு பாவம் பொருத்தருளப்படும்; (அந்நிலையில்) அவர் பிரார்த்தனை செய்தால் அங்கீகரிக்கப்படும்; அவர் தயாராகி உளுவுச் செய்து விட்டுப் பின்னர் தொழுவாரானால் தொழுகை அங்கீகரிக்கப்படும்
3/39, ஃபத்ஹுடன் புகாரீ மற்றும் அதல்லாதது. வாக்கியத்தொடர்
இப்னுமாஜா விற்குரியதாகும். 2/335, ஸஹீஹ் இப்னு மாஜாவைக் காண்க!

3-(3) ((الْحَمْدُ لِلَّهِ الَّذِي عَافَانِي فِي جَسَدِي، وَرَدَّ عَلَيَّ رُوحِي، وَأَذِنَ لي بِذِكْرِهِ))

(3) அல்ஹம்து லில்லாஹில்லதீ ஆஃபானீ ஃபீஜஸதீ வரத்த அல்ய்ய ரூஹீ, வஅதினலீ பிதிக்ரிஹி.

பொருள்: என் உடலில் எனக்கு ஆரோக்கியத்தை நல்கி, என்னுடைய உயிரையும் எனக்குத் திருப்பித் தந்து, அவனை நினைவு கூர்வதற்கு எனக்கு அனுமதியும் வழங்கியவனாகிய அல்லாஹ்விற்கே புகழனைத்தும் உரித்தாகுக!
நூல்: திர்மிதீ, 5/473, ஸஹீஹ் அத்திர்மிதீ 3/144 காண்க!

4-(4) (((إِنَّ فِي خَلْقِ السَّمَوَاتِ وَالأَرْضِ وَاخْتِلاَفِ اللَّيْلِ وَالنَّهَارِ لَآيَاتٍ لأُوْلِي الأَلْبَابِ * الَّذِينَ يَذْكُرُونَ اللّهَ قِيَاماً وَقُعُوداً وَعَلَىَ جُنُوبِهِمْ وَيَتَفَكَّرُونَ فِي خَلْقِ السَّمَوَاتِ وَالأَرْضِ رَبَّنَا مَا خَلَقْتَ هَذا بَاطِلاً سُبْحَانَكَ فَقِنَا عَذَابَ النَّارِ* رَبَّنَا إِنَّكَ مَن تُدْخِلِ النَّارَ فَقَدْ أَخْزَيْتَهُ وَمَا لِلظَّالِمِينَ مِنْ أَنصَارٍ* رَّبَّنَا إِنَّنَا سَمِعْنَا مُنَادِياً يُنَادِي لِلإِيمَانِ أَنْ آمِنُواْ بِرَبِّكُمْ فَآمَنَّا رَبَّنَا فَاغْفِرْ لَنَا ذُنُوبَنَا وَكَفِّرْ عَنَّا سَيِّئَاتِنَا وَتَوَفَّنَا مَعَ الأبْرَارِ* رَبَّنَا وَآتِنَا مَا وَعَدتَّنَا عَلَى رُسُلِكَ وَلاَ تُخْزِنَا يَوْمَ الْقِيَامَةِ إِنَّكَ لاَ تُخْلِفُ الْمِيعَادَ* فَاسْتَجَابَ لَهُمْ رَبُّهُمْ أَنِّي لاَ أُضِيعُ عَمَلَ عَامِلٍ مِّنكُم مِّن ذَكَرٍ أَوْ أُنثَى بَعْضُكُم مِّن بَعْضٍ فَالَّذِينَ هَاجَرُواْ وَأُخْرِجُواْ مِن دِيَارِهِمْ وَأُوذُواْ فِي سَبِيلِي وَقَاتَلُواْ وَقُتِلُواْ لأُكَفِّرَنَّ عَنْهُمْ سَيِّئَاتِهِمْ وَلأُدْخِلَنَّهُمْ جَنَّاتٍ تَجْرِي مِن تَحْتِهَا الأَنْهَارُ ثَوَاباً مِّن عِندِ اللّهِ وَاللّهُ عِندَهُ حُسْنُ الثَّوَابِ * لاَ يَغُرَّنَّكَ تَقَلُّبُ الَّذِينَ كَفَرُواْ فِي الْبِلاَدِ * مَتَاعٌ قَلِيلٌ ثُمَّ مَأْوَاهُمْ جَهَنَّمُ وَبِئْسَ الْمِهَادُ * لَكِنِ الَّذِينَ اتَّقَوْاْ رَبَّهُمْ لَهُمْ جَنَّاتٌ تَجْرِي مِنْ تَحْتِهَا الأَنْهَارُ خَالِدِينَ فِيهَا نُزُلاً مِّنْ عِندِ اللّهِ وَمَا عِندَ اللّهِ خَيْرٌ لِّلأَبْرَارِ * وَإِنَّ مِنْ أَهْلِ الْكِتَابِ لَمَن يُؤْمِنُ بِاللّهِ وَمَا أُنزِلَ إِلَيْكُمْ وَمَآ أُنزِلَ إِلَيْهِمْ خَاشِعِينَ لِلّهِ لاَ يَشْتَرُونَ بِآيَاتِ اللّهِ ثَمَناً قَلِيلاً أُوْلَئِكَ لَهُمْ أَجْرُهُمْ عِندَ رَبِّهِمْ إِنَّ اللّهَ سَرِيعُ الْحِسَابِ*يَا أَيُّهَا الَّذِينَ آمَنُواْ اصْبِرُواْ وَصَابِرُواْ وَرَابِطُواْ وَاتَّقُواْ اللّهَ لَعَلَّكُمْ تُفْلِحُونَ)))

ஆலுஇம்ரான் அத்தியாயம்: வசனம் 190 - 200.
ஃபத்ஹுடன் புகாரீ, பாகம்:8, பக்கம்:237, மற்றும் முஸ்லிம் 1/530.

## 2 - دُعَـاءُ لُبْسِ الثَّــوْبِ

## 2. ஆடை அணிகின்ற போது (கூறப்படும்) துஆ

5- ((الْحَمْدُ لِلّهِ الَّذِي كَسَانِي هَذَا (الثَّوْب) وَرَزَقَنِيهِ مِنْ غَيْرِ حَوْلٍ مِنِّي وَلاَ قُوَّة...))

(5) அல்ஹம்து லில்லாஹில்லதீ கஸானீ ஹாதா(ஸஸவ்ப) வரஜகனீஹி மின் ஃகைரி ஹவ்லின் மின்னீ வலா குவ்வதின்.

பொருள்: இ(ந்த ஆடையான)தை (அவனுடைய உதவியோடு) என்னிடமிருந்து எவ்வித பிரயாசை மற்றும் எவ்வித சக்தியுமின்றி எனக்கு அணிவித்து, அதனை அளித்தவனுமாகிய அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும் உரித்தாகுக!
நூல்கள்: நஸாயீ தவிர அஹ்லுஸ்ஸுனன் இதனைப் பதிவு செய்திருக்கிறார்கள். இர்வாவுல் கலீல், பாகம்:7, பக்கம்:47.

### 3 - دُعَـاءُ لُبْسِ الثَّوبِ الجَـدِيدِ

### 3. புத்தாடை அணியும்போது (கூறப்படும்) துஆ

6- ((اللَّهُمَّ لَكَ الْحَمْدُ أَنْتَ كَسَوْتَنِيهِ، أَسْأَلُكَ مِنْ خَيْرِهِ وَخَيْرِ مَا صُنِعَ لَهُ، وَأَعُوذُ بِكَ مِنْ شَرِّهِ وَشَرِّ مَا صُنِعَ لَهُ))

(6) அல்லாஹூம்ம லகல் ஹம்து அன்த கஸவ்தனீஹி அஸ்அலுக மின் கைரிஹி வகைரி மாஸுனிஅ லஹு, வஅஊது பிக மின் ஷர்ரிஹி வஷர்ரி மா ஸுனிஅ லஹு.

பொருள்: யாஅல்லாஹ்! புகழ் அனைத்தும் உனக்கே உரியது; நீதான் எனக்கு அதை அணிவித்தாய்; அதன் நன்மை மற்றும் எதற்காக அதை தயார் செய்யப்பட்டதோ அதன் நன்மையை உன்னிடம் நான் கேட்கிறேன்; இன்னும், அதன் தீமை மற்றும் எதற்காக அதைத் தயார் செய்யப்பட்டதோ அந்தத்தீமையிலிருந்து உன்னிடம் நான் காப் புத் தேடுகிறேன்.
நூல்கள்: அபூதாவூத், திர்மிதீ, பகவீ, அல்பானிக்குரிய முக்தஸர் ஷமாயில்
அத்திர்மிதீ, பக்கம்:47, காண்க!

### 4 - الدُّعَاءُ لِمَنْ لَبِسَ ثَوْباً جَدِيداً

### 4. புத்தாடை அணிந்தவருக்காக (மற்றவர் கூறும்) துஆ

7-(1) ((تُبْلِي وَيُخْلِفُ اللَّهُ تَعَالَى)).

(7) துப்லீ, வ யுக்லிஃபுல்லாஹு தஆலா

பொருள்: நீர் பழுதாக்குவீர்! உயர்ந்தோனாகிய அல்லாஹ் (அதற்கு) பகரத்தையும் நல்குவான்.

8-(2) ((الْبَسْ جَدِيداً وَعِشْ حَمِيداً وَمُتْ شَهِيداً)).

(8) இல் பஸ் ஜதீதன், வ இஷ் ஹமீதன், வ முத் ஷஹீதன்.

பொருள்: புதியதை நீர் அணிந்து, புகழுக்குரியவராகவும் வாழ்ந்து, வீரமரணமும் எய்திடுவீராக!

5 - مَا يَقُولُ إِذَا وَضَعَ ثَوْبَهُ

## 5. தன்னுடைய ஆடையை அவர் களையும் போது கூற வேண்டியது

9- ((بِسْمِ اللَّهِ))

(9) பிஸ்மில்லாஹ்
பொருள்: அல்லாஹ்வின் பெயரால்...

6 - دُعَاءُ دُخُولِ الْخَلَاءِ

## 6. கழிவறையில் நுழைகின்ற போது (கூறப்படும்) துஆ

10- (([بِسْمِ اللَّهِ] اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنَ الْخُبْثِ وَالْخَبائِثِ))

(10) (பிஸ்மில்லாஹி ) அல்லாஹும்ம இன்னீ அஊது பிக மினல் குப்ஸி வல் கபாயிஸி

பொருள்: (அல்லாஹ்வின் பெயரால் பிரவேசிக்கிறேன்) யா அல்லாஹ்! ஆண் ஷைத்தான் பெண் ஷைத் தான்களி (ன்தீமையி) லிருந்து உன்னைக் கொண்டு நிச்சயமாக நான் பாதுகாவல் தேடுகிறேன்.
நூல்கள் : புகாரீ பாகம்: 1, பக்கம்: 45, முஸ்லிம், பாகம்:1, பக்கம்: 283ல் பதிவு

செய்துள்ளார்கள். இதன் தொடக்கத்தில் பிஸ்மில்லாஹ் அதிகமாக உள்ளது; அதை ஸயீது பின் மன்ஸூர் பதிவு செய்துள்ளார். ஃபத்ஹுல் பாரீ 1/244 காண்க!

7 - دُعَاءُ الْخُرُوجِ مِنَ الْخَلَاءِ

## 7. கழிவறையிலிருந்து வெளியேறும் போது ஓதும் துஆ

11- ((غُفْرَانَكَ))

(11) குஃப்ரானக.

பொருள்: உன்னிடம் பாவம் பொருத்தருள வேண்டுகிறேன்.
நூல்கள்: திர்மிதீ, அபூதாவூது, இப்னுமாஜா ஆகியவை. ஜாதுல் மஆதின் தக்ரிஜ்2/387 காண்க!

8 - الذِّكْرُ قَبْلَ الْوُضُوءِ

## 8. உளு செய்யுமுன் கூறப்பட வேண்டிய துஆ

12- ((بِسْمِ اللَّهِ))

(12) பிஸ்மில்லாஹி.
நூல்கள்: அபூதாவூத், இப்னுமாஜா, அஹ்மது ஆகியோர் இதைப் பதிவு செய்துள்ளார்கள்; இர்வாஉல் கலீல் பாகம்:1/பக்கம் 122 காண்க!

9 - الذِّكْرُ بَعْدَ الْفَرَاغِ مِنَ الْوُضُوءِ

## 9. உளு முடிந் து பின் கூறப்படும் துஆ

13-(1) ((أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ وَأَشْهَدُ أَنَّ مُحَمَّداً عَبْدُهُ وَرَسُولُهُ..))

(13)1 அஷ்ஹது அன்லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீக லஹு வஅஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரஸூலுஹு.

பொருள்: வணங்கப்படுபவன் அல்லாஹ்வையன்றி (வேறு எவரும், எதுவும்) இல்லை; அவன் தனித்தவன்; அவனுக்கு இணையில்லை என்று நான் சாட்சி கூறுகிறேன்; இன்னும் நிச்சயமாக முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவனுடைய (உயரிய) அடியார் மற்றும் அவனுடைய தூதர் என சாட்சி கூறுகிறேன்.

நூல்: முஸ்லிம் பாகம்:1/பக்கம்209.

14-(2) ((اللَّهُمَّ اجْعَلْنِي مِنَ التَّوَّابِينَ وَاجْعَلْنِي مِنَ الْمُتَطَهِّرِينَ))

(14) 2. அல்லாஹும் மஜ்அல்னீ மினத்தவ்வாபீன வஜ்அல்னீ மினல் முததஹ்ஹிரீன்.

பொருள்: யா அல்லாஹ்! தவ்பா - பாவ மீட்சி பெற்றவர்களில் என்னை நீ ஆக்குவாயாக! பரிசுத்தமடைந்தவர்களிலும் என்னை நீ ஆக்குவாயாக!

நூல்கள்: திர்மிதீ, 1/78, மற்றும் ஸஹீஹ் அத்திர்மிதீ, 1/18 பக்கம் பார்க்க!

15-(3) ((سُبْحانَكَ اللَّهُمَّ وَبِحَمْدِكَ، أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ أَنْتَ، أَسْتَغْفِرُكَ وَأَتوبُ إِلَيْكَ))

(15) 3. ஸுப்ஹானகல்லாஹும்ம வபிஹம்திக, அஷ்ஹது அன்லாயிலாஹ இல்லா அன்த்த, அஸ்தஃக்ஃபிருக வஅதூபு இலைக.

பொருள்: யா அல்லாஹ்! உனது புகழைக் கொண்டு (உனக்குத் தகுதியற்ற தன்மைகளிலிருந்து) உன்னைத் துதிக்கிறேன்; உன்னிடம் பிழை பொருக்கத்தேடுகிறேன்; உன்பால் தவ்பாவும் செய்கிறேன்.

நூல்கள்: நஸாயீ அமலுல்யவ்மி வல்லைலா, பக்கம்: 173, மற்றும் இர்வாவுல் கலீல்1/பக்கம்135, பாகம்2/பக்கம்94, பார்க்க!

10 - الذِّكْرُ عِنْدَ الْخُرُوجِ مِنَ الْمَنْزِلِ

## 10. வீட்டிலிருந்து புறப்படும் போது ஓதும் துஆ

16-(1) ((بِسْمِ اللَّهِ، تَوَكَّلْتُ عَلَى اللَّهِ، وَلاَ حَوْلَ وَلا قُوَّةَ إِلاَّ بِاللَّهِ))

(16) பிஸ்மில்லாஹி தவக்கல்து அலல்லாஹி வலா ஹவ்ல லா குவ்வத இல்லா பில் லாஹி.

பொருள்: அல்லாஹ்வின் பெயரால் (புறப்படுகிறேன்; என் காரியங்களை முழுமையாக ஒப்படைத்து), அல்லாஹ்வின் மீது நம்பிக்கை வைத்து விட்டேன்; மேலும், அல்லாஹ்வைக் கொண்டல்லாது (பாவத்திலிருந்து) திரும்புதலும், (நன்மையானவற்றைச் செய்வதற்கு) சக்தியுமில்லை.

நூல்கள்: அபூதாவூத் 4/325, திர்மிதீ 5/490, ஸஹீஹ் அத்திர்மிதீ 3/151 காண்க!

17-(2) ((اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ أَنْ أَضِلَّ، أَوْ أُضَلَّ، أَوْ أَزِلَّ، أَوْ أُزَلَّ، أَوْ أَظْلِمَ، أَوْ أُظْلَمَ، أَوْ أَجْهَلَ، أَوْ يُجْهَلَ عَلَيَّ))

(17) அல்லாஹும்ம இன்னீ அஊது பிக அன்அளில்ல அவ் உளல்ல, அவ் அஜில்ல அவ் உஜல்ல, அவ் அழ்லிம அவ் உழ்லம, அஜ்ஹல அவ் யுஜ்ஹல அலய்ய.

பொருள்: யா அல் லாஹ்! நான் வழி தவறுதல் அல்லது (பிறரால்) நான் வழி தவறச் செய்யப்படல், அல்லது நான் பிசகிவிடுதல் அல்லது (பிறரால்) நான் பிசகச் செய்யப்படல் அல்லது நான் பிறருக்கு அநீதமிழைத் து விடல் அல்லது (பிறரால்) நான் அநீதமிழைக்கப்பட்டு விடல் அல்லது நான் அறிவீனனாக ஆகிவிடல் அல்லது (பிறரால்) அறிவீனம் என்மீது ஆக்கப்படல் ஆகியவற்றிலிருந்து உன்னைக் கொண்டு நிச்சயமாக நான் காவல் தேடுகிறேன்.
நூல்கள்: அஹ்லுஸ்ஸுனன், ஸஹீஹுத் திர்மிதீ 3/152, ஸஹீஹ் இப்னு மாஜா 2/336 காண்க!

## 11 - الذِّكْرُ عِنْدَ دُخُولِ الْمَنْزِلِ

## 11. வீட்டினுள் நுழையும் போது துஆ

18- ((بِسْمِ اللَّهِ وَلَجْنَا، وَبِسْمِ اللَّهِ خَرَجْنَا، وَعَلَى اللَّهِ رَبِّنَا تَوَكَّلْنَا، ثُمَّ لِيُسَلِّمْ عَلَى أَهْلِهِ))

(18) பிஸ்மில்லாஹி வலஜ்னா, வ பிஸ்மில்லாஹி கரஜ்னா, வஅலா ரப்பினா தவக்கல்னா.

பொருள்: அல்லாஹ்வின் பெயரால் நுழைந்தோம்; அல்லாஹ்வின் பெயரைக் கொண்டே புறப்படுவோம்; நம் முடைய இரட்சகனின் மீது (நம்முடைய காரியங்களை முழுமையாக ஒப்படைத்து) நம்பிக்கையும் கொண்டிருக்கிறோம்.

*அபூதாவுத் 4/ 325, 5096 அஷ்ஷைக் இப்னு பாஸ் (ரஹ்) அவர்கள் தனது துஹ்பஃதுல் அஹ்யார் எனும் நூலில் பக்கம் 28 ல் இதை ஹஸன் எனக் கூறியுள்ளார். முஸ்லிமில் ஸஹீஹான தரத்தில் பதிவாகியுள்ள ஒரு செய்தியில்: "எவர் தனது வீட்டினுள் நுழையும்போதும், உணவை உற்கொள்ளளும்போதும் அல்லாஹ்வை நினைவு கூறுவாரோ, உங்களுக்கு இந்த வீட்டில் தங்குவதோ, உணவோ கிடையாது என ஷைத்தான் கூறிவிடுகின்றான்.*

## 12 - دُعَاءُ الذَّهَابِ إِلَى الْمَسْجِدِ

## 12. பள்ளிக்குச் செல்கின்ற போது (கூறப்படும்) துஆ

19- ((اللَّهُمَّ اجْعَلْ فِي قَلْبِي نُوراً، وَفِي لِسَانِي نُوراً، وَفِي سَمْعِي نُوراً، وَفِي بَصَرِي نُوراً، وَمِنْ فَوْقِي نُوراً، وَمِنْ تَحْتِي نُوراً، وَعَنْ يَمِينِي نُوراً، وَعَنْ شِمَالِي نُوراً، وَمِنْ أَمَامِي نُوراً، وَمِنْ خَلْفِي نُوراً، وَاجْعَلْ فِي نَفْسِي نُوراً، وَأَعْظِمْ لِي نُوراً، وَعَظِّمْ لِي نُوراً، وَاجْعَلْ لِي نُوراً، وَاجْعَلْنِي نُوراً، اللَّهُمَّ أَعْطِنِي نُوراً، وَاجْعَلْ فِي عَصَبِي نُوراً، وَفِي لَحْمِي نُوراً، وَفِي دَمِي نُوراً، وَفِي شَعْرِي نُوراً، وَفِي بَشَرِي نُوراً)).

(19) அல்லாஹும்மஜ்அல் ஃபீகல்பீ நூரன், வஃபீ லிஸானீ நூரன், வ ஃபீ ஸம்யீ நூரன், வ ஃபீ பஸரீ நூரன், வமின் ஃபவ்கீ நூரன், வமின் தஹ்தீ நூரன், வ அன் யமீனீ நூரன், வ அன் ஷிமாலீ நூரன், வ மின் அமாமீ நூரன், வ மின் கல்ஃபீ நூரன், வஜ்அல் ஃபீ நஃப்ஸீ நூரன், வ அஃழிம் லீ நூரன், வ அழ்ழிம் லீ நூரன், வஜ்அல்லீ நூரன், வஜ்அல்னீ நூரன், அல்லாஹும்ம அஃதினீ நூரன், வஜ்அல் ஃபீ அசபீ நூரன், வ ஃபீ லஹ்மீ நூரன், வ ஃபீ தமீ நூரன், வ ஃபீ ஷஃரீ நூரன் வஃபீ பஷரீ நூரன்.

பொருள்: யா அல்லாஹ்! என் இதயத்தில் ஒளியை என்னுடைய நாவிலும் ஒளியை, என்னுடைய செவியிலும் ஒளியை, என்னுடைய பார்வையிலும் ஒளியை, எனக்கு மேலிலிருந்தும் கீழிலிருந்தும் ஒளியை, எனக்கு வலப் பக்கமிருந்தும் இடப்பக்கமிருந்தும் முன்னாலிருந்தும் பின்னாலிருந்தும் ஒளியை நீ ஆக்கிடுவாயாக! என் மனதிலும் ஒளியை நீ ஆக்கிடுவாயாக! எனக்கு ஒளியை பெரிதாக்குவாயாக! ஒள்யை எனக்குப் பிரம்மாண்டமானதாகவும் ஆக்குவாயாக! எனக்காக ஒளியை ஆக்கிடுவாயாக! என்னையே ஒளியாக்கி வைப்பாயாக! யா அல்லாஹ்! எனக்கு ஒளியை நல்குவாயாக! என்னுடைய நரம்பிலும் ஒளியை, என்னுடைய இறைச்சியிலும் ஒளியை, என் இரத்தத்திலும் ஒளியை, என்னுடைய முடியிலும் ஒளியை, என்னுடைய மேனியிலும் ஒளியை நீ ஆக்கிடுவாயாக!

குறிப்பு : இவையனைத்துக் காரியங்களும் 11/116ல் 6316 இலக்கமிட்டு புகாரீயில் உள்ளது; மற்றும் முஸ்லிமில் 1/526, 529, 530ல் 763 இலக்கமிட்டு பதிவாகியுள்ளது.
(ஹ) பாகம்: 5 பக்கம் 483, 3419 இலக்கமிட்டு திர்மிதீயில்.

((اللَّهُمَّ اجْعَلْ لِي نُوراً فِي قَبْرِي... وَنُوراً فِي عِظَامِي))

(அல்லாஹும்மஜ்அல்லீ நூரன் ஃபீ கப்ரீ, வ நூரன் ஃபீஇழாமீ என உள்ளது).

பொருள்: என்னுடைய கப்ரில் ஒளியை மற்றும் எலும்புகளில் ஒளியை நீ ஆக்குவாயாக!
அதபுல் முஃப்ரதில் 695 இலக்கமிட்டு பக்கம் 258ல் இமாம் புகாரீ,

((وَزِدْنِي نُوراً، وَزِدْنِي نُوراً، وَزِدْنِي نُوراً))

(வ ஜித்னீ நூரன், வ ஜித்னீ நூரன், வ ஜித்னீ நூரன் என்று இதனைப் பதிவு செய்துள்ளார்கள்.)

பொருள்: எனக்கு ஒளியை அதிகமாக்கிடுவாயாக! (மும்முறை)
இதன் அறிவிப்புத் தொடர் சரியானதென 536 இலக்கமிட்டு அல்பானீ அவர்கள் கூறியுள்ளார்கள்.

((وَهَبْ لِي نُوراً عَلَى نُورٍ)).

(வ ஹப்லீ நூரன் அலா நூரின்)
பொருள்: ஒளிக்கு மேல் ஒளியை எனக்கு அன்பளிப்பு செய்வாயாக!

இப்னு அபீ ஆஸிமின்பால் இதை இணைத்து பத்ஹுல் பாரீயில் இப்னு ஹஜர் அவர்கள் எடுத்துக் கூறியுள்ளார்கள். பத்ஹு 11/118 காண்க! இன்னும் அவர்கள், 'பல்வேறு அறிவிப்புகளில் இருபத்தைந்து குணங்கள் - செயல்கள் ஒருமித்து விட்டன' என்று கூறியுள்ளார்கள்.

## 13 - دُعَاءُ دُخُولِ المَسْجِدِ

## 13. பள்ளியில் நுழையும்போது(கூறக்கூடிய) துஆ

20- ((يَبْدَأُ بِرِجْلِهِ الْيُمْنَى)) ، وَيَقُولُ: ((أَعُوذُ بِاللَّهِ العَظِيمِ، وَبِوَجْهِهِ الْكَرِيمِ، وَسُلْطَانِهِ الْقَدِيمِ، مِنَ الشَّيْطَانِ الرَّجِيمِ))
[بِسْمِ اللَّهِ، وَالصَّلَاةُ] [وَالسَّلَامُ عَلَى رَسُولِ اللَّهِ]
((اللَّهُمَّ افْتَحْ لِي أَبْوَابَ رَحْمَتِكَ)).

(20) அஊது பில்லாஹில் அழிமி, வபிவஜ்ஹிஹில் கரீமி, வஸுல்தானிஹில் கதீமி மினஷ் ஷைத் தானிர் ரஜீம்.
பொருள்: மகத்தான அல்லாஹ்வைக் கொண்டு, சங்கையான அவனுடைய முகம், பூர்வங்கமான அவனுடைய அதிகாரம் ஆகியவற்றைக் கொண்டு தூக்கி எறியப்பட்ட ஷைத்தானி(ன் தீங்கி)லிருந்து நான் பாதுகாப்பு தேடுகிறேன்.
நூல்கள்: அபூதாவூது, மற்றும் 4591 இலக்கமிட்ட ஸஹீஹ் அல்ஜாமிஉ காண்க!

[بِسْمِ اللَّهِ، وَالصَّلَاةُ][1] [وَالسَّلَامُ عَلَى رَسُولِ اللَّهِ][2] ((اللَّهُمَّ افْتَحْ لِي أَبْوَابَ رَحْمَتِكَ))[3].

(பிஸ்மில்லாஹி, வஸ்ஸலாத்து) (1) (வஸ்ஸலாமு அலா ரசூலில்லாஹி) (2) அல்லாஹும் மஃப்தஹ்லீ அப்பாவ ரஹ்மதிக. (3)
பொருள்: அல்லாஹ்வின் பெயரால் நுழைகிறேன்; அருளும் சாந்தியும் அல்லாஹ்வின் தூதர் மீது உண்டாவதாக! யா அல்லாஹ் உன்னுடைய அருள் வாயில்களை எனக்கு நீ திறப்பாயாக!

(1) இப்னுஸ் ஸுன்னீ அவர்கள் 88 இலக்கமிட்டு இதனைப் பதிவு செய்துள்ளார்கள்; இன்னும் அல்பானீ அவர்கள் இதை அழகான தரத்தையுடைய தெனக் கூறினார்கள்.
(2) அபூதாவூத் 1/126, மற்றும் ஸஹீஹுல் ஜாமிஉ 1/528 காண்க!
(3) முஸ்லிம் 1/494, மற்றும் சுனன் இப்னு மாஜாவில் ஃபாதிமா - ரளியல்லாஹு அன்ஹா - அவர்களின் ஹதீஸிலிருந்து, 'அல்லாஹும்மஃப்தஹ்லீ அப்வாப ரஹ்மதிக! என பதிவாகி உள்ளது. அது போன்றவற்றுக்காக அல்பானீ அவர்கள் அதைச் சரியானதெனக் கூறியுள்ளார்கள். ஸஹீஹ் இப்னு மாஜா 1/128: 129 காண்க!

## 14 - دُعَاءُ الْخُرُوجِ مِنَ الْمَسْجِدِ

## 14. பள்ளியிலிருந்து வெளியேறுகின்ற போது (கூறப்படும்) துஆ

21-((يَبْدَأُ بِرِجْلِهِ الْيُسْرَى)) وَيَقُولُ: ((بِسْمِ اللَّهِ وَالصَّلَاةُ وَالسَّلَامُ عَلَى رَسُولِ اللَّهِ، اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ مِنْ فَضْلِكَ، اللَّهُمَّ اعْصِمْنِي مِنَ الشَّيْطَانِ الرَّجِيمِ)).

(21) பிஸ்மில்லாஹி வஸ்ஸலாது வஸ்ஸலாமு அலாரசூலில்லாஹி, அல்லாஹும்ம .இன்னீ அஸ்அலுக மின் ஃபள்லிக, அல்லாஹும் மஃஸிம்னீ மினஷ் ஷைதானிர் ரஜீம்

பொருள்: அல்லாஹ்வின் பெயரால், அருளும் சாந்தியும் அல்லாஹ்வின் தூதர் அவர்களின் மீது உண்டாகுக! யா அல்லாஹ்! நிச்சயமாக நான், உன்னுடைய பேரருளிலிருந்து உன்னிடம் கேட்கிறேன்; யா அல்லாஹ்! தூக்கியெறியப்பட்ட ஷைத்தானிலிருந்து என்னைப் பாதுகாப்பாயாக!

(1) 20 இலக்கமிட்ட முந்திய ஹதீஸின் அறிவிப்புகள் தொடரைக் காண்பீராக! 'அல்லாஹும்ம ஃஸிம்னீ மினஷ் ஷைத்தானிர் ரஜீம்' என்பதன் அதிகமானது இப்னுமாஜாவிற்குரியதாகும்;. ஸஹீஹ் இப்னுமாஜா 1/129 காண்க!

## 15 - أَذْكَارُ الأَذَانِ

## 15. பாங்கின் போது கூறப்படும் துஆ

22- (1) يَقُولُ مِثْلَ مَا يَقُولُ المُؤَذِّنُ إِلاَّ فِي ((حَيَّ عَلَى الصَّلاَةِ وَحَيَّ عَلَى الْفَلاَحِ))

(22) 1. 'ஹய்ய அலஸ் ஸலாதி' மற்றும் 'ஹய்ய அலல் ஃபலாஹி' என்பது நீங்கலாக, பாங்கு கூறுபவர் போன்றே (செவியேற்பவரான) அவர் கூறவேண்டும்; (இவ்விரு வார்த்தை களைச் செவியேற்கின்ற போது)

فَيَقُولُ: ((لاَ حَوْلَ وَلاَ قُوَّةَ إِلاَّ بِاللَّهِ)).

'லாஹவ்ல வலா குவ்வத இல்லா பில்லாஹி ' என்று அவர் கூறுவார்.
நூல்கள்: அல்புகாரீ 1/152, மற்றும் முஸ்லிம் 1/288.

23- (2) يَقُولُ: ((وَأَنَا أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ وَأَنَّ مُحَمَّداً عَبْدُهُ وَرَسُولُهُ، رَضِيتُ بِاللَّهِ رَبّاً، وَبِمُحَمَّدٍ رَسُولاً، وَبِالْإِسْلاَمِ دِيناً)) ((يَقُولُ ذَلِكَ عَقِبَ تَشَهُّدِ الْمُؤَذِّنِ)).

(23) 2. 'வஅன அஷ்ஹது அன்லா இஷ்ஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீக லஹு, வஅன்ன முஹம்மதன் அப்துஹு வரசூலுஹு, ரளீத்து பில்லாஹி ரப்பன், வபிமுஹம்மதின் ரசூலன், வபில் இஸ்லாமி தீனன்' என்று முஅத்தின் - பாங்கு கூறுபவர் அஷ்ஹது அன்லாஇலாஹ இல்லல்லாஹு, அஷ்ஹது அன்ன முஹம்மதன் ரசூலுல்லாஹி என்பதைக் கூறிய பிறகு (பாங்கைக் கேட்பவரான) அவர் கூறுவார்.

பொருள்: நிச்சயமாக வணங்கப்படுபவன் அல்லாஹ் வையன்றி (வேறு) இல் லை; அவன் தனித்தவன்; அவனுக்கு இணையில்லை; மேலும், நிச்சயமாக முஹம்மது (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் அவனுடைய அடியார் மற்றும் அவனுடைய தூதர் என நான் சாட்சியம் கூறுகிறேன்; அல்லாஹ்வை இரட்சகனாக முஹம்மதை தூதராக, இஸ்லாத்தையும் மார்க்கமாக நான் பொருந்திக் கொண்டேன்.
நூல்: முஸ்லிம் 1/1290.

24-(3) ((يُصَلِّي عَلَى النَّبِيِّ صلى الله عليه وسلم بَعْدَ فَرَاغِهِ مِنْ إِجَابَةِ الْمُؤَذِّنِ)).

(24) 3. பாங்கு கூறியவருக்குப் பதில் கூறி முடித்து விட்ட பிறகு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது ஸலவாத்துக் கூறுவார். அதன் பின்னர்
நூல்: முஸ்லிம் 1/288.

25-(4) يَقُولُ: ((اللَّهُمَّ رَبَّ هَذِهِ الدَّعْوَةِ التَّامَّةِ، وَالصَّلاَةِ الْقَائِمَةِ، آتِ مُحَمَّداً الْوَسِيلَةَ وَالْفَضِيلَةَ، وَابْعَثْهُ مَقَاماً مَحمُوداً الَّذِي وَعَدْتَهُ، [إِنَّكَ لَا تُخْلِفُ الْمِيعَادَ]))

(25) அல்லாஹும்ம ரப்ப ஹாதிஹித் தஃவதித் தாம்மா, வஸ்ஸலாதில் காயிமா ஆதி முஹம்மதன் அல்வஸீலத வல் ஃபளீலத, வப்அஸ்ஹு மகாமம் மஹ்மூதனில்லதீ வஹத்தஹு (இன்னக லா துக்லிஃபுல் மீஆத்).

பொருள்: நிறைவான இவ்வழைப்பு மற்றும் நிலை பெற்று விட்ட தொழுகையின் இரட்சகனே! முஹம்மது (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுக்கு வஸீலா (சுவனத்தில் உள்ள உயர்பதவி) மற்றும் சிறப்பை நல்குவாயாக! நீ வாக்களித்துள்ளாயே அத்தகைய (போற்றுதலுக்குரிய இடமான) மகாமம் மஹ்மூதாவில் அவர்களை எழுப்புவாயாக!

நூல்கள்: புகாரீ 1/152, அடைகுறிக்கிடையில் உள்ள 'இன்னக லா துக்லிஃபுல் மீஆத்' என்பது, பைஹகீ (1/140) அவர்களுக்குரியதாகும். அதன் அறிவிப்புத் தொடர் அழகானதென அல்லாமா இப்னு பாஜ் அவர்கள் 'துஹ்பதுல் அக்யார்' பக்கம் 38ல் கூறியுள்ளார்கள்.

26-(5) ((يَدْعُو لِنَفسِهِ بَيْنَ الْأَذَانِ وَالْإِقَامَةِ فَإِنَّ الدُّعَاءَ حِينَئِذٍ لاَ يُرَدُّ))

(26) 5. பாங்கு இகாமத்துக்கிடையே தனக்காக அவர் துஆச் செய்து கொள்வார்; ஏனெனில், நிச்சயமாக துஆ அந்த சமயத்தில் மறுக்கப்படுவதில்லை; (அல்லாஹ்விடம் அங்கீகாரத்திற்குரியதாகும்) நூல்கள்: திர்மிதீ, அபூதாவூது, அஹ்மது ஆகியோர்; இர்வாஉல் கலீல் 1/262.

## 16 - دُعَـاءُ الاسْـتِفْتَاحِ

## 16. (தொழுகையின்) தொடக்க துஆ

27-(1) ((اللَّهُمَّ بَاعِدْ بَيْنِي وَبَيْنَ خَطَايَايَ كَمَا بَاعَدْتَ بَيْنَ الْمَشْرِقِ وَالْمَغْرِبِ، اللَّهُمَّ نَقِّنِي مِنْ خَطَايَايَ كَمَا يُنَقَّى الثَّوْبُ الْأَبْيَضُ مِنَ الدَّنَسِ، اللَّهُمَّ اغْسِلْنِي مِنْ خَطَايَايَ، بِالثَّلْجِ وَالْماءِ وَالْبَرَدِ)).

(27) 1. அல்லாஹும்ம பாயித் பைனீ வபைன கதாயாய கமா பாஅத்த பைனல் மஷ்ரிகி வல் மக்ரிபி, அல்லாஹும்ம நக்கினீ மின் கதாயாய கமா யுனக்கஸ் ஸவ்புல் அப்யளு மினத் தனஸ், அல்லாஹும் மஃக்ஸில்னீ மின் கதாயாய பிஸ்ஸல்ஜி, வல்மாயி, வல்பரதி.

பொருள்: யா அல்லாஹ்! கிழக்கு மற்றும் மேற்கிற்கிடையே நீ தூரமாக்கி வைத்திருப்பது போன்று எனக்கு மற்றும் என் பாவங்களுக்கிடையே நீ தூரமாக்கி வைப்பாயாக! யா அல்லாஹ்!
மிக்க வெண்மையான ஆடை அழுக் கிலிருந்து சுத்தப் படுத்தப்படுவது போன்று என் பாவங்களிலிருந் து என்னை நீ சுத்தப்படுத்துவாயாக! யா அல்லாஹ்! ஐஸ், தண்ணீர், ஆலங்கட்டி ஆகியவற்றைக் கொண்டு என் தவறுகளிலிருந்து என்னை நீ கழுவுவாயாக!
நூல்கள்: புகாரீ 1/181, மற்றும் முஸ்லிம் 1/419

28-(2)((سُبْحانَكَ اللَّهُمَّ وَبِحَمْدِكَ، وَتَبارَكَ اسْمُكَ، وَتَعَالَى جَدُّكَ، وَلاَ إِلَهَ غَيْرُكَ))

(28) 2. ஸுப்ஹானகல்லாஹும்ம வபிஹம்திக, வ தபாரகஸ்முக, வதஆலா ஜத்துக, வலா இலாஹ ஃகைருக.
பொருள்: (உனக்குத் தகுதியற்ற எல்லாக் குறைகளிலிருந்தும்) உன்னைத் துதிக்கிறேன்: (உனது புகழைக் கொண்டு) உன்னைப் போற்றியவனாகவே உள்ளேன்; உன் பெயாின் பரக்கத்துகள் (அதை கூறுமிடத்து) பன்மடங்காகி விடுகின்றன; உன்னுடைய கண்ணியம் மற்றும் மகத்துவம் உயர்வடைந்தும் விட்டன; இன்னும், உன்னையன்றி வணங்கப்படுபவர் (வேறு எவரும்
எதுவும்) இல்லை.
நூல்கள்: திர்மிதீ, அபூதாவூது, இப்னுமாஜா, நஸாயீ இதனைப் பதிவு
செய்துள்ளார்கள். ஸஹீஹ் அத்திர்மிதீ 1/77, மற்றும் ஸஹீஹ் இப்னுமாஜா 1/135 காண்க!

29-(3) ((وَجَّهْتُ وَجْهِيَ لِلَّذِي فَطَرَ السَّمَوَاتِ وَالأَرْضَ حَنِيفَاً وَمَا أَنَا مِنَ الْمُشْرِكِينَ، إِنَّ صَلاَتِي، وَنُسُكِي، وَمَحْيَايَ، وَمَمَاتِي لِلَّهِ رَبِّ الْعَالَمِينَ، لاَ شَرِيكَ لَهُ وَبِذَلِكَ أُمِرْتُ وَأَنَا مِنَ الْمُسْلِمِينَ.اللَّهُمَّ أَنْتَ المَلِكُ لاَ إِلَهَ إِلاَّ أَنْتَ، أَنْتَ رَبِّي وَأَنَا عَبْدُكَ، ظَلَمْتُ نَفْسِي وَاعْتَرَفْتُ بِذَنْبِي فَاغْفِرْ لِي ذُنُوبي جَمِيعَاً إِنَّهُ لاَ يَغْفِرُ الذُّنوبَ إِلاَّ أَنْتَ. وَاهْدِنِي لِأَحْسَنِ الأَخْلاقِ لاَ يَهْدِي لِأَحْسَنِها إِلاَّ أَنْتَ، وَاصْرِفْ عَنِّي سَيِّئَهَا، لاَ يَصْرِفُ عَنِّي سَيِّئَهَا إِلاَّ أَنْتَ، لَبَّيْكَ وَسَعْدَيْكَ، وَالخَيْرُ كُلُّهُ بِيَدَيْكَ، وَالشَّرُّ لَيسَ إِلَيْكَ، أَنَا بِكَ وَإِلَيْكَ، تَبارَكْتَ وَتَعَالَيْتَ، أَسْتَغْفِرُكَ وَأَتوبُ إِلَيْكَ))

(29) -3. வஜ்ஜஹ்த்து வஜ்ஹிய லில்லதீ ஃபதரஸ் ஸமாவாத்தி வல் அர்ள ஹனீபன் வமா அன மினல் முஷ்ரிகீன், இன்ன ஸலாதீ வநுஸுகி, வமஹ்யாய வமமாதீ லில்லாஹி ரப்பில் ஆலமீன், லாஷரீக லஹு வ பிதாலிக உமிர் த்து வஅன மினல் முஸ்லிமின்.
அல்லாஹும்ம அன்த்தல் மலிகு, லா இலாஹ இல்லா அன்த்த, அன்த்த ரப்பீ, வஅன அப்துக, ழலம்து நஃப்ஸீ, வஃதரஃப்து பிதன்பீ, ஃபஃக்பிர்லீ துநூபீ ஜமீஅன், இன்னஹு லா யஃக் ஃபிருத்துனுப இல்லா அன்த்த, வஹ்தினீ லி அஹ்ஸனில் அக்லாகி, லாயஹ் தீ லி அஹ்ஸனிஹா இல்லா அன்த்த, வஸ்ரிஃப் அன்னீ ஸய்யிஅஹா, லா யஸ்ரிஃப் அன்னீ ஸய்யிஅஹா இல்லா அன்த்த, லப்பைக வஸஅதைக்க, வல்கைரு குல்லுஹு பி யதைக்க தபாரக்த வதஆலைத்த, அஸ்தஃக்ஃபிருக வஅதூபு இலைக்.

பொருள்: எல்லா அசத்தியமான மதங்களை விட்டும் என்னை நீக்கிக் கொண்டு இஸ்லாமிய மார்க்கத்தின் பால்) சாய்ந்தவனாக, வானங்கள் மற்றும் பூமியை படைத்தவனாகியவனுக்கே என் முகத்தை நான் திருப்பிவிட்டேன்; (ஆனாலும்) நான் இணைவைத்துக் கொண்டிருப்போரில் உள்ளவனல்ல; நிச்சயமாக என்னுடைய தொழுகை, என்னுடைய அறுப்பு, என்னுடைய ஜீவியம், என்னுடைய மரணம் ஆகியவை அகிலத்தாரின் இரட்சகனாகிய அல்லாஹ்விற்கே உரியதாகும்; அவனுக்கு இணை(ஏதும், எவரும்)இல்லை; அதைக் கொண்டே நான் கட்டளையிடப்பட்டுள்ளேன்; நானோ (முற்றிலும் கீழ்படிந்த) முஸ்லிம்களில் உள்ளவன்;

யாஅல்லாஹ்! நீதான் அரசன்; வணங்கப்படுபவன் உன்னையன்றி (வேறு) இல் லை; நீதான் என்னுடைய இரட்சகன், நானோ உன் அடியான்; எனக்கே நான் அநீதமிழைத்து விட்டேன்; என் பாவத்தை நான் ஒப்புக் கொண்டும் விட்டேன்; ஆகவே, என்னுடைய பாவங்கள் அனைத்தையும் எனக்காக நீ பொருத்தருள்வாயாக! நிச்சயமாகக் காரியம்: பாவங்களை உன்னைத் தவிர (மற்றெவரும்) பொருத்தருள மாட்டார்; அழகிய குணங்கள்பால் எனக்கு நீ நேர்வழியும் காட்டுவாயாக! அவற்றில் அழகியவற்றுக்கு உன்னையல்லாது மற்றெவரும் வழி காட்டமாட்டார் (வழி காட்ட முடியாது); இன்னும் அவற்றில் தீமையானதை என்னை விட்டும் திருப்பி விடுவாயாக! ஏனெனில், அவற்றில் தீயதை என்னை விட்டும் உன்னல்லாத மற்றவர் திருப்பமாட்டார் (திருப்பமுடியாது).

(உன் கட்டளையை ஏற்று பதில் கூற) திரும்பத் திரும்பத் தயாராக உள்ளேன்; உன் காரியம் நற்பாக்கியம் உடையது; நன்மை - அது ஒவ்வொன்றும் உன்னுடைய இரு கரங்களில் உள்ளன; தீமையோ உன்னிடம் உள்ளதல்ல; நான் உன்னைக் கொண்டு உன்பால் உள்ளேன்; நீ பாக்கியங்களை நல்குபவன்;உயர்வடைந்தும் விட்டவன்; உன்னிடம் நான் பாவமன்னிப்புத் தேடுகிறேன்; உன்பால் தவ்பாவும் செய்கிறேன். 1/154ல் முஸ்லிம் இதனைப் பதிவு செய்துள்ளனர்.

30-(4) ((اللَّهُمَّ رَبَّ جِبْرَائِيلَ، وَمِيْكَائِيلَ، وَإِسْرَافِيلَ، فَاطِرَ السَّمَوَاتِ وَالأَرْضِ، عَالِمَ الغَيْبِ وَالشَّهَادَةِ أَنْتَ تَحْكُمُ بَيْنَ عِبَادِكَ فِيمَا كَانُوا فِيهِ يَخْتَلِفُونَ. اهْدِنِي لِمَا اخْتُلِفَ فِيهِ مِنَ الْحَقِّ بِإِذْنِكَ إِنَّكَ تَهْدِي مَنْ تَشَاءُ إِلَى صِرَاطٍ مُسْتَقِيمٍ))

(30) 4. அல்லாஹும்ம ரப்ப ஜிப்ராயீல, வ மீகாயீல, வ இஸ்ராஃபீல, ஃபாதிரஸ் ஸமாவாத்தி வல் அர்ளி, ஆலிமல் கைபி வஷ்ஷஹாததி, அன்த்த தஹ் குமு பைன இபாதிக ஃபீமா கானூ ஃபீஹி யக்தலிஃபூன், இஹ்தினீ லிமக்துலிஃப ஃபீஹி மினல் ஹக்கி, பிஇத்னிக இன்னக தஹ்தீ மன்தஷாஉ இலா ஸிராதின் முஸ்தகீம்.

பொருள்: யா அல்லாஹ்! ஜிப்ராயீல், மீகாயீல், இஸ்ராஃபீல் ஆகியோரின் இரட்சகனே! வானங்கள் மற்றும் பூமியைப் படைத்தவனே! மறைவானவை, மறைவில்லாதவை ஆகியவற்றை அறிந்தவனே! உன் அடியார்களுக்கு மத்தியில் - அவர்கள் எதில் கருத்து வேறுபாடு கொண்டுள்ளார்களோ அதுபற்றி நீயே தீர்ப்பு வழங்குவாய்; சத்தியத்திலிருந்து எதில் கருத்து வேறுபாடு கொள்ளப்பட்டதோ அதுபற்றி உன் அனுமதி கொண்டு எனக்கு நீ வழி காட்டுவாயாக! நிச்சயமாக நீ, நிலையான வழியின்பால் - நீ நாடியவர்களுக்கு நேர்வழி காட்டுவாய்.
இதனை முஸ்லிம் 1/534ல் பதிவு செய்துள்ளார்கள்.

31-(5) ((اللَّهُ أَكْبَرُ كَبِيرَاً، اللَّهُ أَكْبَرُ كَبِيراً، اللَّهُ أَكْبَرُ كَبِيراً، وَالْحَمْدُ لِلَّهِ كَثِيراً، وَالْحَمْدُ لِلَّهِ كَثِيراً، وَالْحَمْدُ لِلَّهِ كَثِيراً، وَسُبْحَانَ اللَّهِ بُكْرَةً وَأَصِيلاً)) ثَلاثاً

(31) அல்லாஹு அக்பர் கபீரா, அல்லாஹு அக்பர் கபீரா, அல்லாஹு அக்பர் கபீரா, வல்ஹம்து லில்லாஹி கஸீரா, வல்ஹம்து லில்லாஹி கஸீரா, வல்ஹம்து லில்லாஹி கஸீரா, வ ஸுப்ஹானல்லாஹி புக்ரதன் வஅஸீலா. என்று மும்முறை கூற வேண்டும்.

பொருள்: அல்லாஹ் மிகப்பெரியவன்; அதிகதிகமாக புகழ் அனைத்தும் அல்லாஹ்விற்கே உரியதாகும்; காலையிலும் மாலையிலும் அல்லாஹ் வை நான் துதிக்கிறேன்.

((أَعُوذُ بِاللَّهِ مِنَ الشَّيْطَانِ: مِنْ نَفْخِهِ، وَنَفْثِهِ، وَهَمْزِهِ))

அஊது பில்லாஹி மினஷ்ஷைதானி, மின் நஃபகிஹி, வ நஃபஸிஹி, வஹமஜிஹி.

பொருள்: ஷைத்தானி(ன் தீமைகளி)லிருந்து, அவனால் பைத்தியம் பிடிப்பதிலிருந்து, அவனால் தற் பெருமை ஏற்படுவதிலிருந்து, கவியினால் மற்றவர்களைச் சாடுதல் ஆகியவற்றிலிருந்து அல்லாஹ்வைக் கொண்டு நான் காவல் தேடுகிறேன்.

1/203 இலக்கமிட்டு அபூதாவூது, 1/265 இலக்கமிட்டு இப்னுமாஜா, 4/85 இலக்கமிட்டு அஹ்மது ஆகியோர் இதனைப் பதிவு செய்துள்ளார்கள். இது போன்றே இப்னு உமர் - ரளியல்லாஹு அன்ஹுமா - அவர்கள் அறிவித்துஇதனை முஸ்லிம் அவர்கள் 1/420ல் பதிவு செய்துள்ளனர்; இதில் ஒரு சம்பவமும் உண்டு.

32-(6) ((اللَّهُمَّ لَكَ الْحَمْدُ، أَنْتَ نُورُ السَّمَوَاتِ وَالأَرْضِ وَمَنْ فِيهِنَّ، وَلَكَ الْحَمْدُ أَنْتَ قَيِّمُ السَّمَوَاتِ وَالأَرْضِ وَمَنْ فِيهِنَّ، [وَلَكَ الْحَمْدُ أَنْتَ رَبُّ السَّمواتِ وَالأَرْضِ وَمَنْ فِيهِنَّ] [وَلَكَ الْحَمْدُ لَكَ مُلْكُ السَّمَوَاتِ وَالأَرْضِ وَمَنْ فِيهِنَّ] [وَلَكَ الْحَمْدُ أَنْتَ مَلِكُ السَّمَوَاتِ وَالأَرْضِ] [وَلَكَ الْحَمْدُ] [أَنْتَ الْحَقُّ، وَوَعْدُكَ الْحَقُّ، وَقَوْلُكَ الْحَقُّ، وَلِقاؤُكَ الْحَقُّ، وَالْجَنَّةُ حَقٌّ، وَالنَّارُ حَقٌّ، وَالنَّبِيُّونَ حَقٌّ، وَمحَمَّدٌ صلى الله عليه وسلم حَقٌّ، وَالسّاعَةُ حَقٌّ] [اللَّهُمَّ لَكَ أَسْلَمتُ، وَعَلَيْكَ تَوَكَّلْتُ، وَبِكَ آمَنْتُ، وَإِلَيْكَ أَنَبْتُ، وَبِكَ خاصَمْتُ، وَإِلَيْكَ حاكَمْتُ. فَاغْفِرْ لِي مَا قَدَّمْتُ، وَمَا أَخَّرْتُ، وَمَا أَسْرَرْتُ، وَمَا أَعْلَنْتُ] [أَنْتَ المُقَدِّمُ، وَأَنْتَ المُؤَخِّرُ لاَ إِلَهَ إِلاَّ أَنْتَ] [أَنْتَ إِلَهِي لاَ إِلَهَ إِلاَّ أَنْتَ]))

(32) அல்லாஹும்ம லகல் ஹம்து அன்த்த நூருஸ்ஸமாவாத்தி வல் அர்ளி வமன் ஃபீஹின்ன வலகல் ஹம்து அன்த்த கய்யிமுஸ் ஸமாவாத்தி வல் அர்ளி வமன் ஃபீஹின்ன, (வலகல் ஹம்து அன்த்த ரப்புஸ் ஸமாவாத்தி வல் அர்ளி வமன் ஃபீஹின்ன) (வலகல் ஹம்து லக முல்குஸ் ஸமாவாத்தி வல் அர்ளி வமன் ஃபீஹின்ன) (வலகல் ஹம்து அன்த்த மலிகுஸ் ஸமாவாத்தி வல் அர்ளி) (வலகல் ஹம்து) அன்த்தல் ஹக்கு, வவஃதுகல் ஹக்கு, வகவ்லுகல் ஹக்கு, வலிகாஉகல் ஹக்கு, வல் ஜன்னது ஹக்குன், வன்னாரு ஹக்குன், வன்னபிய்யூன ஹக்குன், வ முஹம்மதுன் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஹக்குன், வஸ்ஸாஅது ஹக்குன் (அல்லாஹும்ம லக அஸ்லம்து, வ அலைக தவக்கல் து, வ பிக ஆமன்த்து, வ இலைக அனப்த்து, வ பிக காசம்து, வ இலைக ஹாகம்து, ஃபக்ஃபிர்லீ மா கத்தம்து, வமா அக்கர்து, வமா அஸ்ரர்து, வமா அஃலன்த்து) (அன்த்தல் முகத்திமு, வஅன்த்தல் முஹக்கிரு, லா இலாஹ இல்லா அன்த்த) (அன்த்த இலாஹீ, லா இலாஹ இல்லா அன்த்த).

பொருள்: யா அல்லாஹ்! உனக்கே புகழ் அனைத் தும். நீதான் வானங்கள் மற்றும் பூமி இன்னும் அவற்றிலுள்ளவற்றை பிரகாசிக்கச்செய்கின்றாய்;உனக்கே புகழ் அனைத்தும், நீதான் வானங்கள் மற்றும் பூமி இன்னும் அவற்றிலுள்ளவற்றை நிலை நிற்கச்செய்தவன்;

(உனக்கே புகழ் அனைத் தும், நீதான் வானங்கள் மற்றும் பூமி இன்னும் அவற்றிலுள்ளவற்றின் இரட்சகன்;) (உனக்கே புகழ் அனைத்தும், வானங்கள் மற்றும் பூமி இன்னும் அவற்றிலுள்ளவை ஆகியவற்றின் ஆட்சி உனக்கே உரியது;) (உனக்கே புகழ் அனைத்தும், நீதான் வானங்கள் மற்றும் பூமியின அரசன்).

(உனக்கே புகழனைத்தும்) (நீதான் உண்மையானவன்; உன்னுடைய வாக்கும் உண்மையானதே! உன் கூற்றும் உண்மையானதே! உன்னை சந்திப்பதும் உண்மையானதே! சுவனமும் உண்மையானதே! நரகமும் உண்மையானதே! நபிமார்களும் உண்மையானவர்களே! (உண்மையாகவே வந்தனர்!) முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் உண்மையானவர்களே! கியாமத் நாளும் (அது நிலைபெறுவதும்) உண்மையே! (யாஅல்லாஹ்!

உன்னிடமே (என்னை) நான் ஒப்படைத்தேன்; உன் மீதே நம்பிக்கையும் வைத்து விட்டேன்; உன் னையே விசுவாசங்கொண்டிருக்கிறேன்; உன்பாலே திரும்பி விட்டேன்; உன் னைக் கொண்டே வழக்காடுவேன்; உன்னிடமே தீர்ப்புத் தேடுவேன்; ஆகவே, நான் முற்படுத்தியவை, பிற்படுத்தியவை, நான் மறைத்தவை, பகிரங்கப்படுத்தியவை - ஆகியவற்றை எனக்காக நீ பொருத்தருள் வாயாக! (நீயே முற்படுத்தி வைப் பவன்; நீயே பிற்படுத்தி வைப்பவன்; வணங்கப்படுபவன் உன்னையன்றி(வேறு) இல்லை;) (நீதான் என்னால் வணங் கப்படுபவன்; வணங்கப்படுபவன் உன்னையன்றி (வேறு எதுவும், எவரும்) இல்லை.

குறிப்பு: இந்த துஆவை, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இரவில் தஹஜ்ஜுதுக்காக எழுகின்றபோது கூறக்கூடியவர்களாக இருந்தனர்.
(1) பத்ஹுடன் புகாரீ 3/3, 11/116, 13/371, 423, 465 மற்றும் முஸ்லிமில் சுருக்கமாக இது போன்றே உள்ளது 1/532.

## 17 - دُعَـــاءُ الرُّكُـــوعِ

## 17. ருகூவின் துஆ

33-(1) ((سُبْحانَ رَبِّيَ الْعَظِيمِ)). ثلاث مرَّاتٍ.

(33) ஸுப்ஹான ரப்பியல் அழீம். (1)

பொருள்: மகத்தான என்னுடைய இரட்சகன் தூயவன் (அவனை நான் துதிக்கிறேன்).
(1) அஹ்லுஸ்ஸுனன் மற்றும் அஹ்மது இதனைப் பதிவு செய்துள்ளார்கள்.
ஸஹீஹ் அத்திர்மிதீ 1/83.

34-(2) ((سُبْحَانَكَ اللَّهُمَّ رَبَّنَا وَبِحَمْدِكَ، اللَّهُمَّ اغْفِرْ لِي)).

(34) ஸுப்ஹானகல்லாஹும்ம ரப்பனா வபி ஹம்திக அல்லாஹும் மஃக் ஃபிர்லீ. (2)

பொருள்: எங்களுடைய இரட்சகனாகிய யா அல்லாஹ்! உன்னுடைய புகழைக் கொண்டு உன்னை நான் துதிக்கிறேன்; யா அல்லாஹ்! எனக்கு பாவம் பொருத்தருள்வாயாக!.
நூல்கள்: புகாரீ 1/99, முஸ்லிம் 1/350.

35-(3) ((سُبُّوحٌ، قُدُّوسٌ، رَبُّ المَلاَئِكَةِ وَالرُّوحِ)).

(35) 3. ஸுப்பூஹுன், குத்தூஸுன், ரப்புல் மலாயிகதி வர்ரூஹி.

பொருள்:(அவனுக்கு) தகுதியற்றபண்புகளிலிருந்து) தூய்மை படுத்தப்படுபவன்; (அவனுக்கு தகுதியற்ற பண்புகளிலிருந்து) பரிசுத்தப்படுத்தப்படுபவன்; மலக்குகள் மற்றும் ஜிப்ரீல் (அலைஹிஸ் ஸலாம்) அவர்களின் இரட்சகன். நூல்: முஸ்லிம் 1/353, மற்றும் அபூதாவூது 1/320.

36-(4) ((اللَّهُمَّ لَكَ رَكَعْتُ، وَبِكَ آمَنْتُ، وَلَكَ أَسْلَمْتُ، خَشَعَ لَكَ سَمْعِي، وَبَصَرِي، وَمُخِّي، وَعَـــظْمِي، وَعَصَبِي، [وَمَا اسْتَقَلَّتْ بِهِ قَدَمِي])).

(36) 4. அல்லாஹும்ம லக ரகஃது, வபிக ஆமன்த்து, வலக அஸ்லம்து, கஷஅ லக ஸம்யீ, வபஸரீ, வ முக்கீ, வஅழ்மீ, வ அஸபீ, வ மஸ்தகல்ல பிஹி கதமீ.

பொருள்: யா அல்லாஹ்! உனக்கே நான் ருகூஉ செய்தேன்; உன்னைக் கொண்டே நான் ஈமான் கொண்டுள்ளேன்; உனக்கே நான் சிரம் பணிந்தேன்; என்னுடைய செவி, என்னுடைய பார்வை, என்னுடைய மூளை,என்னுடைய எலும்பு, என்னுடைய நரம்பு, என்னுடைய இரு பாதங்கள் எதை சுமந்து கொண்டதோ அ(ந்த என் உடலான)து ஆகியவை உனக்குப் பணிந்து விட்டன.

நூல்கள்: முஸ்லிம் 1/534, இப்னு மாஜாவைத் தவிர (மற்ற ஸுனனுக்குரிய) நால்வர்.

37-(5) ((سُبْحَانَ ذِي الْجَبَرُوتِ، وَالْمَلَكُوتِ، وَالْكِبْرِيَاءِ، وَالْعَظَمَةِ))

(37) 5. ஸுப்ஹான தில் ஜபரூத்தி, வல் மலகூத்தி, வல் கிப்ரியாயி, வல் அழமத்தி.

பொருள்: அடக்கி ஆளுதல், ஆட்சி செலுத்துதல், பெருமை, மகத்துவம் ஆகியவற்றுக்கு உரியவனாகிய அவன் தூயவன் (என நான் துதிக்கிறேன் ).

நூல்கள்: அபூதாவூது 1/230, அஹ்மது, நஸயீ ஆகியோர் பதிவு செய்துள்ளார்கள்; மேலும், ஸஹீஹ் அபூதாவூதில் 1166 இலக்கமிட்டு அல்பானீ அதை சரியானதெனக் கூறியுள்ளார்கள்.

## 18 ـ دُعَـاءُ الرَّفْــعِ مِنَ الرُّكُـوعِ

## 18. "ருகூவி' லிருந்து உயர்கின்ற போது (கூறப்படும் ) துஆ

38-(1) ((سَمِعَ اللَّهُ لِمَنْ حَمِدَهُ)).

(38) 1. ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதஹு

பொருள்: அல்லாஹ் - அவனைப் போற்றியவரை செவியேற்று விட்டான். (ஃபத்ஹுடன் புகாரீ 2/282)

39-(2) ((رَبَّنَا وَلَكَ الْحَمْدُ، حَمْداً كَثِيراً طَيِّباً مُبارَكاً فِيهِ)).

(39) 2. ரப்பனா வலகல் ஹம்து, ஹம்தன் கஸீரன் தய்யிபன் முபாரகன் ஃபீஹி.

பொருள்: எங்களுடைய இரட்சகா! உனக்கே புகழ் அனைத்தும்உரித்தாகுக! அநேகப்புகழ்களாக; (அவை) நல்லவையாக அவற்றில் அபிவிருத்திகள் நல்கப்பட்டவையாக (அவை இருக்க உனக்கே) உரித்தாகுக! ஃபத்ஹுடன் புகாரீ 2/284

40-(3) ((مِلْءَ السَّمَوَاتِ وَمِلْءَ الأَرْضِ، وَمَا بَيْنَهُمَا، وَمِلْءَ مَا شِئْتَ مِنْ شَيءٍ بَعْدُ. أَهلَ الثَّناءِ وَالْمَجْدِ، أَحَقُّ مَا قَالَ الْعَبْدُ، وَكُلُّنَا لَكَ عَبْدٌ. اللَّهُمَّ لاَ مَانِعَ لِمَا أَعْطَيْتَ، وَلاَ مُعْطِيَ لِمَا مَنَعْتَ، وَلاَ يَنْفَعُ ذَا الجَدِّ مِنْكَ الجَدُّ))

(40) 3. மில்அஸ் ஸமாவாத்தி வமில்அல் அர்ளி வமா பைனாஹுமா, வமில்அ மாஷிஃத மின் ஷையின் பஅது, அஹ்லஸ்ஸனாயி வல் மஜ்தி, அஹக்கு மா காலல் அப்து, வ குல்லுனா லக அப்துன், அல்லாஹும்ம லா மானிஅ லிமா அஃதைத, வலா முஃதிய லிமா மனஃத, வலா யன்ஃபஉ தல் ஜத்தி மின்கல் ஜத்து.

பொருள்: வானங்கள் நிரம்ப, பூமியும் நிரம்ப, அவை இரண்டிற்கு மத்தியில் உள்ளவையும் (நிரம்ப அதற்குப்) பிறகு எப்பொருளில் நீ நாடுகிறாயோ அதுவும் நிரம்ப (புகழ் அனைத்தும் உனக்கே உரித்தாகுக!). போற்றுதல் மற் றும் கீர்த்திக்குரியவனே! அடியார்கள் கூறியதில் மிக்க உரியது, நாங்கள் ஒவ்வொருவரும் உனக்கு அடியார்; யா அல்லாஹ்! நீ கொடுத்ததை தடுப்பவர் (எவரும்) இல்லை; நீ தடுத்து விட்டதை கொடுக்கக் கூடியவரும் இல்லை; நீ முடிவெடுத்ததை -- - நிர்ணயித்ததை (எவராலும்) தட்டமுடியாது; செல்வந்தனின் செல்வம் உன்னிலிருந்து (உன் தண்டனையிலிருந்து) அவன் -- தன்னைக் காப்பாற்றிக் கொள்ள பலன் தராது.
நூல்: முஸ்லிம் 1/346

## 19 - دُعَـاءُ السُّـجُودِ

## 19. ஸுஜூதுவில் (கூறப்படும்) துஆ

41-(1) ((سُبْحَانَ رَبِّيَ الأَعْلَى)) ثلاث مرَّاتٍ

(41) 1. ஸுப்ஹான ரப்பியல் அஃலா (மும்முறை)

பொருள்:மிக்க உயர்ந்தோனாகிய என்னுடைய இரட்சகன் தூயவன்.

நூல்கள்: அஹ்லுஸ்ஸுனன், அஹ்மது ஆகியோர் இதனைப் பதிவு செய்துள்ளனர். 1/83 அத்திர்மிதீ காண்க!

42-(2) ((سُبْحَانَكَ اللَّهُمَّ رَبَّنَا وَبِحَمْدِكَ، اللَّهُمَّ اغْفِرْ لِي)).

(42) 2. ஸுப்ஹானகல்லாஹும்ம ரப்பனா வபிஹம்திக அல்லாஹும்ம ஃக் ஃபிர்லீ.

பொருள்: எங்களுடைய இரட்சகனாகிய யா அல்லாஹ்! உன்னுடைய புகழைக் கொண்டு உன்னை நான் துதிக்கிறேன்; யா அல்லாஹ்! எனக்கு பாவம் பொருத்தருள்வாயாக!
(நூல்கள்: புகாரீ, முஸ்லிம்)

43-(3) ((سُبوحٌ، قُدُّوسٌ، رَبُّ الْمَلَائِكَةِ وَالرُّوحِ))

(43) 3. ஸுப்பூஹுன், குத்தூஸுன், ரப்புல் மலாயிகதி வர்ரூஹி.

பொருள்:(அவனுக்கு தகுதியற்றபண்புகளிலிருந்து) தூய்மை படுத்தப்படுபவன்; (அவனுக்கு தகுதியற்ற பண்புகளிலிருந்து) பரிசுத்தப்படுத்தப்படுபவன் ; மலக்குகள் மற்றும் ஜிப்ரீல் (அலைஹிஸ் ஸலாம்) அவர்களின் இரட்சகன். நூல்: முஸ்லிம் 1/533.

44-(4) ((اللَّهُمَّ لَكَ سَجَدْتُ وَبِكَ آمَنْتُ، وَلَكَ أَسْلَمْتُ، سَجَدَ وَجْهِي لِلَّذِي خَلَقَهُ، وَصَوَّرَهُ، وَشَقَّ سَمْعَهُ وَبَصَرَهُ، تَبَارَكَ اللَّهُ أَحسَنُ الْخَالِقِينَ)).

(44) -4. அல்லாஹும்ம லக ஸஜத்து, வபிக ஆமன்து, வலக அஸ்லம்து, ஸஜத வஜ்ஹிய லில்லதீ கலகஹு, வஸவ்வரஹு, வஷக்க ஸம்அஹு, வபசரஹு, தபாரகல்லாஹு அஹ்ஸனுல் காலிகீன்.

பொருள்: யா அல்லாஹ்! உனக்காகவே நான் ஸுஜுது செய்தேன்; உன்னை விசுவாசமும் கொண்டிருக்கிறேன்; என் முகம் -- அதைப் படைத்து, அதற்கு உருவம் கொடுத்து, அதற்கு செவியையும், பார்வையையும் (அதற்குரிய துவாரங்களைப்) பிளந்தானே அத்தகையவனுக்கு -- (சிரம் தாழ்த்தி) ஸுஜுது செய்து விட்டது. ஆகவே, படைக்கிறவர்களில் மிக அழகானவனான அல்லாஹ் உயர்வானவன்.
நூல்கள்: முஸ்லிம் 1/534 மற்றும் அவரல்லாதோர்

45-(5) ((سُبْحَانَ ذِي الْجَبَرُوتِ، وَالْمَلَكُوتِ، وَالْكِبْرِيَاءِ، وَالْعَظَمَةِ))

(45) -5. ஸுப்ஹான தில் ஜபரூத்தி, வல் மலகூத்தி, வல் கிப்ரியாயி, வல் அழமத்தி.

பொருள்: அடக்கி ஆளுதல், ஆட்சி செலுத்துதல், பெருமை, மகத்துவம் ஆகியவற்றுக்கு உரியவனாகிய அவன் தூயவன் (என நான் துதிக்கிறேன்)

நூல்கள்: அபூதாவூது 1/230, அஹ்மது, நஸயீ ஆகியோர், ஸஹீஹ் அபூதாவூதில் அல்பானீ இதனைச் சரியான தரத்தையுடையதெனக் கூறியுள்ளார்.

46-(6) ((اللَّهُمَّ اغْفِرْ لِي ذَنْبِي كُلَّهُ: دِقَّهُ وَجِلَّهُ، وَأَوَّلَهُ وَآخِرَهُ، وَعَلاَنِيَّتَهُ وَسِرَّهُ)).

(46) -6. அல்லாஹும்மஃக் ஃபிர்லீ தன்பீ குல்லஹு, திக்கஹு, வ ஜில்லஹு, வஅவ்வலஹு, வஆகிரஹு, வஅலானிய்யதஹு, வஸிர்ரஹு.

பொருள்: யா அல்லாஹ்! என் பாவம் -- அது ஒவ்வொன்றையும், அதில் சிறியது, பெரியது, அதில் முதாலாவது, கடைசியானது, அதில் பகிரங்கமானது, மறைவானது ஆகியவற்றை எனக்காகப் பொருத்தருள்வாயாக! முஸ்லிம்:1/350.

47-(7) ((اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِرِضَاكَ مِنْ سَخَطِكَ، وَبِمُعَافَاتِكَ مِنْ عُقوبَتِكَ، وَأَعُوذُ بِكَ مِنْكَ، لاَ أُحْصِي ثَنَاءً عَلَيْكَ، أَنْتَ كَمَا أَثْنَيْتَ عَلَى نَفْسِكَ))

(47) -7. அல்லாஹும்ம இன்னீ அஊது பி ரிளாக மின் ஸகதிக, வபிமுஆஃபாதிக மின் உகூபதிக, வ அஊது பிக மின்க, லா உஹ்சீ ஸனாஅன் அலைக அன்த்த கமா அஸ்னைத்த அலா நஃப்ஸிக.

பொருள்: யா அல்லாஹ்! உன் பொருத்தத் தைக் கொண்டு உன்னுடைய கோபத்திலிருந் தும், உன் மன்னிப்பைக் கொண்டு உன்னுடைய தண்டனையிலிருந் தும் நிச்சயமாக நான் காவல் தேடுகிறேன்; இன்னும் உன்னைக் கொண்டு உன்னிலிருந்து காவல் தேடுகிறேன்; உன்னை வரையறுத்துப் புகழ்ந்துவிட நான் சக்திபெறமாட்டேன்; நீயோ உன்னை நீ புகழ்ந் தது போன்றே உள்ளாய். நூல்: முஸ்லிம் 1/532.

## 20 - دُعَـاءُ الْجِلْسَةِ بَيْنَ السَّجْدَتَيْنِ

## 20. இருஸஜ்தாவுக்கிடையே இருப்பில் (கூறப்படும்) துஆ

48-(1) ((رَبِّ اغْفِرْ لِي، رَبِّ اغْفِرْ لِي)).

(48) 1. ரப்பிஃக் ஃபிர்லீ, ரப்பிஃக் ஃபிர்லீ.

பொருள்: என் இரட்சகா எனக்கு பாவம் பொருத்தருள்வாயாக! என் இரட்சகா எனக்கு பாவம் பொருத்தருள் வாயாக! நூல்கள்: அபூதாவூது 1/231, ஸஹீஹ் இப்னுமாஜா 1/148 காண்க!

49-(2) ((اللَّهُمَّ اغْفِرْ لِي، وَارْحَمْنِي، وَاهْدِنِي، وَاجْبُرْنِي، وَعَافِنِي، وَارْزُقْنِي، وَارْفَعْنِي))

(49) 2. அல்லாஹும்மஃக் ஃபிர்லீ, வர்ஹம்னீ, வஹ்தினீ, வஜ்புர்னீ, வஆஃபினீ, வர்ஜுக்னீ, வர் ஃபஃனீ.
பொருள்: யா அல்லாஹ்! எனக்காக பாவம் பொருத்தருள்வாயாக! எனக்கு அருளும் செய்வாயாக! எனக்கு நேர்வழியும் காட்டுவாயாக! (நல்லறங்கள் செய்ய) என்னை நிர்பந்திப்பாயாக! எனக்கு சுகத்தையும் நல்குவாயாக! (சம்பத்துகளை) எனக்கு நல்குவாயாக! (சுவனத்தில்) என்னை உயர் பதவியில் ஆக்குவாயாக!
நூல்கள்: நஸாயீயை தவிர, ஸுனன் உடையவர்கள் இதனைப் பதிவுசெய்துள்ளார்கள். ஸஹீஹ் அத்திர்மிதீ 1/90, மற்றும் ஸஹீஹ் இப்னு மாஜா 1/148.

## 21 - دُعَاءُ سُجُودِ التِّلاَوَةِ

## 21. ஸஜ்தா வசனங்கள் ஓதிவிட்டு ஸஜ்தாவில் (கூறப்படும்) துஆ

50-(1) ((سَجَدَ وَجْهِي لِلَّذِي خَلَقَهُ، وَشَقَّ سَمْعَهُ وَبَصَرَهُ بِحَوْلِهِ وَقُوَّتِهِ، (فَتَبَارَكَ اللَّهُ أَحْسَنُ الْخَالِقِينَ)))

(50) 1. ஸஜத வஜ்ஹிய லில்லதீ கலகஹு, வஷக்க ஸம்அஹு, வபசரஹு பிஹவ்லிஹி வகுவ்வதிஹி ஃப தபாரகல்லாஹு அஹ்ஸனுல் காலிகீன்.

பொருள்: என் முகம்-அதைப் படைத் து, அதன் செவியையும், அதன் பார்வையையும் (அதற்குரிய துவாரங்களை) தன்னுடைய சக்தி மற்றும் தன் ஆற்றலால் பிளந்தானே அத்தகையவனுக்கு-(சிரம் தாழ்த்தி) ஸுஜுது செய்து விட்டது; ஆகவே, படைக் கிறவர்களில் மிக அழகானவனான அல்லாஹ் உயர்வானவன்.

நூல்கள்: திர்மிதீ 2/474, மற்றும் அஹ்மது 6/301, மற்றும் ஹாகிம் பதிவு செய்துஅதை சரியானதெனவும் கூறி, தஹபீ அவர்கள், 1/220ல் ஒப்புதல் தெரிவித்துள்ளார்கள்; அதிகமாக உள்ளது அவர்களுக்குரியதாகும்.

51-(2) ((اللَّهُمَّ اكْتُبْ لِي بِهَا عِنْدَكَ أَجْراً، وَضَعْ عَنِّي بِهَا وِزْراً، وَاجْعَلْهَا لِي عِنْدَكَ ذُخْراً، وَتَقَبَّلْهَا مِنِّي كَمَا تَقَبَّلْتَهَا مِنْ عَبْدِكَ دَاوُدَ))

(51) 2. அல்லாஹும் மக்துப் லீ பிஹா இன்தக அஜ்ரன், வளஃ அன்னீ பிஹா விஜ்ரன், வஜ்அல்ஹா லீ இன்தக துக்ரன், வதகப்பல்ஹா மின்னீ கமா தகப்பல்தஹா மின் அப்திக தாவூது.

பொருள்: இந்த (ஸஜ்தாவுக்குப்) பகரமாக உன்னிடத்தில் எனக்காக யா அல்லாஹ்! நற்கூலியை எழுதுவாயாக! அதன் மூலம் என்னை விட்டும் பாவத்தை அழித்தும் விடுவாயாக! உன்னிடத்தில் அதை எனக்கு சேமிப்பாகவும் ஆக்குவாயாக! உன்னுடைய அடியார் தாவூத் (அலைஹிஸ்ஸலாம்) அவர்களிடமிருந் து அதை ஏற்றுக் கொண் டது போன்று என்னிலிருந்தும் அதை நீ ஏற்றுக் கொள்வாயாக!
நூல்கள்: திர்மிதீ 2/473, மற்றும் ஹாகிம் அவர்கள் அதை சரியான அறிவிப்புத் தொடர் எனக் கூற அதற்கு தஹபியும் 1/219ல் ஒப்புதல் தெரிவித்துள்ளார்கள்.

## 22 - التَّشَـــــهُّدُ

## 22. அத்தஷஹ்ஹுது (அத்தஹிய்யாத்து)

52- ((التَّحِيَّاتُ لِلَّهِ، وَالصَّلَوَاتُ، وَالطَّيِّبَاتُ، السَّلاَمُ عَلَيْكَ أَيُّهَا النَّبِيُّ وَرَحْمَةُ اللَّهِ وَبَرَكَاتُهُ، السَّلاَمُ عَلَيْنَا وَعَلَى عِبَادِ اللَّهِ الصَّالِحِينَ. أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَأَشْهَدُ أَنَّ مُحَمَّداً عَبْدُهُ وَرَسُولُهُ))

(52) அத்தஹிய்யாத்து லில்லாஹி, வஸ்ஸலவாத்து வத்தய்யிபாத்து, அஸ்ஸலாமு அலைக அய்யுஹன் நபிய்யு, வரஹ்மதுல்லாஹி வபரகாத்துஹு அஸ்ஸலாமு அலைனா, வஅலா இபாதில்லாஹிஸ்ஸாலிஹீன், அஷ்ஹது அன் லாயிலாஹ இல்லல்லாஹு வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரசூலுஹு.

பொருள்: காணிக்கைகள், கருணைகள், நல்லவைகள் ஆகியவை அல்லாஹ்விற்கே உரியதாகும்; நபி அவர்களே! உங்கள் மீது சாந்தி மற்றும் அல்லாஹ்வின் அருள், அவனின் பரகத்துகள் ஆகியவை உண்டாகுக! எங்கள் மீது மற் றும் அல்லாஹ்வின் நல்லடியார்கள் மீது சாந்தி உண்டாவதாக! வணங்கப்படுபவன் அல்லாஹ்வையன்றி (வேறு எதுவும், எவரும்) இல்லை என நான் சாட்சி கூறுகிறேன்; நிச்சயமாக முஹம்மது (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் அவனுடைய அடியார் மற்றும் அவனுடைய தூதர் எனவும் நான் சாட்சி கூறுகிறேன்.
நூல்கள்: ஃபத்ஹுடன் புகாரீ 1/13, முஸ்லிம் 1/301.

## 23 - الصَّلاةُ عَلَى النَّبِيِّ صلى الله عليه وسلم بَعْدَ التَّشَهُّدِ

## 23. தஷஹ்ஹுத் அத்தஹிய்யாத்)திற்குப் பிறகு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது (கூறப்படவேண்டிய) ஸலவாத்து

53-(1) ((اللَّهُمَّ صَلِّ عَلَى مُحَمَّدٍ، وَعَلَى آلِ مُحَمَّدٍ، كَمَا صَلَّيْتَ عَلَى إِبْرَاهِيمَ، وَعَلَى آلِ إِبْرَاهِيمَ، إِنَّكَ حَمِيدٌ مَجِيدٌ، اللَّهُمَّ بَارِكْ عَلَى مُحَمَّدٍ وَعَلَى آلِ مُحَمَّدٍ، كَمَا بَارَكْتَ عَلَى إِبْرَاهِيمَ وَعَلَى آلِ إِبْرَاهِيمَ، إِنَّكَ حَمِيدٌ مَجِيدٌ))

(53) 1. அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மதின், கமா ஸல்லைத அலா இப்ராஹீம வஅலா ஆலி இப்ராஹீம இன்னக ஹமீதுன் மஜீது; அல்லாஹும்ம பாரிக் அலா முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மதின் கமா பாரக்த அலா இப்ராஹீம வஅலா ஆலி இப்ராஹீம இன்னக ஹமீதுன் மஜீது.

எஞ்சியிருப்பவர்களில் அவருக்குப் பகரத்தையும் நல்குவாயாக! அகிலத்தாரின் இரட்சகனே! எங்களுக்கும், அவருக்கும் பாவம் பொருத்தருள்வாயாக! அவருடைய கப்ரில் அவருக்கு விஸ்தீரணத்தையும், நல்குவாயாக! அதில் அவருக்கு ஒளியையும் நல்குவாயாக!
நூல் : முஸ்லிம் 2/632.

## 55 - الدُّعَـاءُ لِلمَيِّتِ فِي الصَّلَاةِ عَلَيْهِ

## 55. மய்யித்துக்காக ஜனாஸா தொழுகையில் (ஓதப்படும்) துஆ

156-(1) ((اللَّهُمَّ اغْفِرْ لَهُ وَارْحَمْهُ، وَعَافِهِ، وَاعْفُ عَنْهُ، وَأَكْرِمْ نُزُلَهُ، وَوَسِّعْ مُدْخَلَهُ، وَاغْسِلْهُ بِالْمَاءِ وَالثَّلْجِ وَالْبَرَدِ، وَنَقِّهِ مِنَ الْخَطَايَا كَمَا نَقَّيْتَ الثَّوْبَ الأَبْيَضَ مِنَ الدَّنَسِ، وَأَبْدِلْهُ دَاراً خَيْراً مِنْ دَارِهِ، وَأَهْلاً خَيْراً مِنْ أَهْلِهِ، وَزَوْجَاً خَيْراً مِنْ زَوْجِهِ، وَأَدْخِلْهُ الْجَنَّةَ، وَأَعِذْهُ مِنْ عَذَابِ الْقَبْرِ [وَعَذَابِ النَّارِ]))

(156) 1. அல்லாஹும் மஃக் ஃபிர்லஹு, வர்ஹம்ஹு, வ ஆஃபிஹி, வஃ ஃபு அன்ஹு, வ அக்ரிம் நுஜுலஹு, வவஸ்ஸிஃ முத்கலஹு, வஃக்ஸில்ஹு பில்மாயி. வஸ்ஸல்ஜி, வல் பரதி, வ நக்கிஹி மினல் கதாயா கமா நக்கைத்தஸ் ஸவ்வல் அப்யள மினத் தனஸி, வ அப்தில்ஹு தாரன் கைரன் மின் தாரிஹி, வ அஹ்லன் கைரன் மின் அஹ்லிஹி, வஜவ்ஜன் கைரன் மின் ஜவ்ஜிஹி, வ அத்கில்ஹுல் ஜன்னத்த, வ அயித்ஹு மின் அதாபில் கப்ரி (வ அதாபின்னாரி).

பொருள்: யாஅல்லாஹ்! அவருக்கு பாவம் பொருத்தருள்வாயாக! அவருக்கு அருளும் செய்வாயாக! சுகத்தையும் நல்குவாயாக! அவரை மன்னித்தும் விடுவாயாக! அவருடைய தங்குதலை கண்ணியப்படுத்தவும் செய்வாயாக! அவருடைய தங்குதலை கண்ணியப்படுத்தவும் செய்வாயாக! அவரின் நுழைவிடத்தை விஸ்தீரணமாக்கியும் தருவாயாக! தண்ணீர், ஐஸ்கட்டி, ஆலங்கட்டி, ஆகியவற்றைக் கொண்டு அவரைக் கழுகவும் செய்வாயாக! அழுக்கிலிருந்து மிக்க வெண்மையான ஆடையை நீ சுத்தம் செய்தது போன்று பாவங்களிலிருந்து அவரைப் பரிசுத்தப்படுத்துவாயாக! அவருடைய வீட்டை விட மிகச் சிறந்ததான ஒரு வீட்டை, அவருடைய குடும்பத்தினரை விடவும் மிகச் சிறந்த குடும்பத்தினரை, அவருடைய மனைவியை விட மிகச் சிறந்த மனைவியையும் அவருக்கு நீ மாற்றித் தருவாயாக! இன்னும் அவரை சுவனத்தில் நீ பிரவேசிக்கச் செய்து, கப்ருடைய வேதனையிலிருந்தும் (நரகவேதனையிலிருந்தும்) அவரை நீ பாதுகாப்பாயாக ! முஸ்லிம் 2/663.

157-(2) ((اللَّهُمَّ اغْفِرْ لِحَيِّنَا وَمَيِّتِنَا، وَشَـاهِدِنَا وَغَائِبِنَا، وَصَـغِيرِنَا وَكَبِيرِنَا، وَذَكَرِنَا وَأُنْثَانَا. اللَّهُمَّ مَنْ أَحْيَيْتَهُ مِنَّا فَأَحْيِهِ عَلَى الْإِسْلَامِ، وَمَنْ تَوَفَّيْتَهُ مِنَّا فَتَوَفَّهُ عَلَى الإِيمَانِ، اللَّهُمَّ لاَ تَحْرِمْنَا أَجْرَهُ، وَلاَ تُضِلَّنَا بَعْدَهُ))

(157) 2. அல்லாஹும்மஃக் ஃபிர் லிஹய்யினா வமய்யிதினா, வஷாஹிதினா, வகாயிபினா, வஸகீரினா, வகபீரினா, வதகரினா, வ உன்ஸானா, அல்லாஹும்ம மன் அஹ்யைதஹு மின்னா ஃப அஹ்யிஹி அலல் இஸ்லாம், வமன் தவஃப் ஃபைதஹு மின்னா ஃப தவஃப்பஹு அலல் ஈமான், அல்லாஹும்ம லா தஹ்ரிம்னா அஜ்ரஹு வலா துளில்லனா பஃதஹு.

பொருள்: எங்களில் உயிருடன் உள்ளவருக்கு, எங்களில் இறப்பெய்தி விட்டவருக்கு, எங்களில் வந்திருப்பவருக்கு, வராதவருக்கு, எங்களில் சிறார்க்கு, பெரியவர்க்கு, எங்களில் ஆடவருக்கு, பெண்டிர்க்கு அனைவருக்கும் பாவம் பொருத் தருள்வாயாக! யாஅல்லாஹ்! எங்களில் எவரை உயிருடன் வைத்துள்ளாயோ அவரை இஸ்லாத்தின் மீது ஜீவிக்கச் செய்வாயாக! எங்களில் எவரை மரணிக்கச் செய்கிறாயோ, அவர்களை ஈமானின் மீது நீ மரணிக்கச் செய்வாயாக! யாஅல்லாஹ்! அவருடைய கூலியை எங்களுக்குத் தடுத்து விடாதே! அவருக்குப் பிறகு எங்களை வழி தவறவும் செய்து விடாதே!
நூல்கள் : இப்னுமாஜா 1/480, அஹ்மது 2/368, ஸஹீஹ் இப்னுமாஜா 1/251 காண்க!

158-(3) ((اللَّهُمَّ إِنَّ فُلَانَ بْنَ فُلَانٍ فِي ذِمَّتِكَ، وَحَبْلِ جِوَارِكَ، فَقِهِ مِنْ فِتْنَةِ الْقَبْرِ، وَعَذَابِ النَّارِ، وَأَنْتَ أَهْلُ الْوَفَاءِ وَالْحَقِّ، فَاغْفِرْ لَهُ وَارْحَمْهُ إِنَّكَ أَنْتَ الْغَفُورُ الرَّحِيمُ))

(158) 3. அல் லாஹும்ம இன்ன ஃபுலானப்ன ஃபுலானின் ஃபீ திம்மதிக, வ ஹப்லி ஜிவாரிக, ஃபகிஹி மின் ஃபித்னதில் கப்ரி, வஅதாபின்னாரி, வஅன்த்த அஹ்லுல் வஃபாயி வல் ஹக்கி, ஃப ஃக் ஃபிர் லஹு, வர்ஹம்ஹு, இன்னக அன்த்தல் ஃக ஃபூருர் ரஹீம்.

பொருள் : யாஅல்லாஹ்! நிச்சயமாக இன்னார் மகன் இன்னார் உன் பொறுப்பில் மற்றும் உன் பாதுகாப்பிலாவார்; ஆகவே, கப்ரின் குழப்பம் மற்றும் நரக வேதனையிலிருந்து அவரைக் காப்பாயாக! நீயோ வாக்கை நிறைவேற்றுபவன் மற்றும் உண் மையானவன், ஆகவே அவருக்கு பாவம் பொருத்தருள்வாயாக! அவருக்கு அருளும் செய்வாயாக! நிச்சயமாக நீயே மிக்கப் பொருத்தருள்பவன், மிகுந்த கிருபையாளன்.
நூல்கள்: இப்னுமாஜா இதைப் பதிவு செய்துள்ளார்கள்; ஸஹீஹ் இப்னுமாஜா 1/251ல் காண்க! அபூதாவூது 3/211ல் பதிவு செய்துள்ளார்கள்.

159-(4) ((اللَّهُمَّ عَبْدُكَ وَابْنُ أَمَتِكَ احْتَاجَ إِلَى رَحْمَتِكَ، وَأَنْتَ غَنِيٌّ عَنْ عَذَابِهِ، إِنْ كَانَ مُحْسِناً فَزِدْ فِي حَسَنَاتِهِ، وَإِنْ كَانَ مُسِيئاً فَتَجَاوَزْ عَنْهُ))

(159) 4. அல் லாஹும்ம அப்துக, வப்னு அமதிக, இஹ்தாஜ இலா ரஹ்மதிக, வ அன்த்த கனிய்யுன் அன் அதாபிஹி, இன்கான முஹ்ஸினன் ஃபஜித் ஃபீ ஹஸனாத்திஹி, வ இன்கான முஸீஅன் ஃபதஜாவஸ் அன்ஹு.
பொருள் : யாஅல்லாஹ்! உன்னுடைய அடியார், உன்னுடைய அடியாளின் மகனார் உன்னுடைய அருளின் பால் தேவையுடையவராகி விட்டார்; நீயோ அவரைத் தண்டிப்பதை விட்டும் தேவையற்றவன்; அவர் நன்மையுடையவராக இருப்பின் அவருடைய நன்மையில் அதிகப்படுத்துவாயாக! தீமையுடையவராக அவர் இருந்தாலோ அவரை பொருட்படுத்தாது விட்டு விடுவாயாக!

56 - الدُّعَاءُ لِلْفَرَطِ فِي الصَّلاَةِ عَلَيْهِ

## 56. குழந்தைகளுக்கு-அவர்களுக்காக தொழுகையில் துஆ

160-(1) ((اللَّهُمَّ أَعِذْهُ مِنْ عَذَابِ الْقَبْرِ))

وإن قال: ((اللَّهُمَّ اجْعَلْهُ فَرَطاً وَذُخْراً لِوَالِدَيْهِ، وَشَفِيعاً مُجَاباً، اللَّهُمَّ ثَقِّلْ بِهِ مَوَازِينَهُمَا، وَأَعْظِمْ بِهِ أُجورَهُمَا، وَأَلْحِقْهُ بِصَالِحِ الْمُؤْمِنِينَ، وَاجْعَلْهُ فِي كَفَالَةِ إِبْرَاهِيمَ، وَقِهِ بِرَحْمَتِكَ عَذَابَ الْجَحِيمِ، وَأَبْدِلْهُ دَاراً خَيْراً مِنْ دَارِهِ، وَأَهْلاً خَيْراً مِنْ أَهْلِهِ، اللَّهُمَّ اغْفِرْ لِأَسْلاَفِنَا، وَأَفْرَاطِنَا، وَمَنْ سَبَقَنَا بِالْإِيمَانِ)) فَحَسَنٌ

(160) 1. அல்லாஹூம்ம அயித்ஹூ மின் அதாபில் கப்ரி, வ இன் கால, அல்லாஹூம் மஜ்அல்ஹூ ஃபரதன் வதுக்ரன் லிவாலிதைஹி, வஷஃபீஹன் முஜாபன், அல்லாஹூம்ம ஸக்கில் பிஹி மவாஜீனஹூமா, வஅஃழிம் பிஹி உஜூரஹூமா, வஅல்ஹிக்ஹூ பி ஸாலிஹில் முஃமினீன, வஜ்அல்ஹூ ஃபீ கஃபாலத்தி இப்ராஹீம, வகிஹி பிரஹ்மத்திக அதாபல் ஜஹீம், வஅப்தில்லஹூ தாரன் கைரன் மின் தாரிஹி, வ அஹ்லன் கைரன் மின் அஹ்லிஹி, அல்லாஹூம் மஃக் ஃபிர் லி அஸ்லா ஃபினா, வ அஃப்ராதினா, வமன் ஸபகனா பில் ஈமான் என்றும் அவர் கூறினால் அழகாகும்.

பொருள் : யாஅல்லாஹ்! கப்ருடைய வேதனையிலிருந்து அ(க்குழந்தையான)தை காப்பாயாக! யாஅல்லாஹ்! அ(க்குழந்தையான) தை அதன் பெற்றோர்களுக்கு முந்தி போய்விட்ட நற்கூலியாக மற்றும் சேமிப்பாகவும், அங்கீகரிக்கப்பட்ட பரிந்துரை உடையதாகவும் ஆக்குவாயாக! யாஅல்லாஹ்! அவ்விருவரின் நிறுக்கப்படுபவைகளை அதனைக் கொண்டு கணமானதாக ஆக்கி, அதன்மூலம் அவ்விருவரின் நற்கூலிகளையும் மகத்தானதாக ஆக்குவாயாக! விசுவாசிகளில் நல்லவர்களோடும் அவரைச் சேர்த்து வைப்பாயாக! இப்ராஹீமின் பொறுப்பிலும் அவரை நீ ஆக்குவாயாக! உன் அருளால் நரக தண்டனையிலிருந்தும் அதனைக் காப்பாயாக! அவருடைய வீட்டை விட மிகச் சிறந்ததான ஒரு வீட்டை, அவருடைய குடும்பத்தாரை விடவும் மிகச் சிறந்த குடும்பத்தாரையும் அதற்கு நீ பகரமாக ஆக்குவாயாக! யா அல்லாஹ்! எங்களில் முந்தியோருக்கு மற்றும் எங்களை முந்திச் சென்று விட்ட குழந்தைகளுக்கும், ஈமானோடு எங்களை முந்தி விட்டவர்களுக்கும் பாவம் பொருத்தருள்வாயாக!

குறிப்பு: அபூஹுரைரா ரளியல்லாஹூ அன்ஹூ எந்தப் பாவமும் செய்யாத ஒரு சிறுவனுக்கு தொழுகை நடத்திய போது அவர்களுக்குப் பின்னால் நான் தொழுதேன், அப்போது அவர்கள் இதைக் கூற நான் செவியேற்றேன் என்று ஸயீது பின் அல்முஸய்யப் ரளியல்லாஹூ அன்ஹூ கூறுகிறார்கள்.

நூல்கள்: 3/416 முக்னீ இப்னு குதாமா அவர்களுக்குரியதையும், அத்துரூஸூல் முஹிம்மா லி ஆம்மத்தில் உம்மா என்ற இப்னுபாஜ் அவர்களுடைய நூல் பக்கம் 15ம் காண்க!

161-(2) ((اللَّهُمَّ اجْعَلْهُ لَنَا فَرَطاً، وَسَلَفاً، وَأَجْراً))

(161) 2. அல்லாஹும் மஜ்அல்ஹு லனா ஃபரதன், வஸலஃபன் வஅஜ்ரன்.

பொருள் : யாஅல்லாஹ்! அ(க்குழந்தையான)தை, எங்களுக்கு விருந்துபசாரத்தின் தயாரிப்புகளைச் செய்யக் கூடியதாக மற்றும் முன்னானதாகவும், நற்கூலியாகவும் ஆக்குவாயாக!

குறிப்பு: குழந்தைகளுக்காக தொழுகை நடத்திய போது ஹஸன் ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் அல்பாத்திஹா அத்தியாயத்தை ஓதிவிட்டு, ஹதீஸில் உள்ள வார்த்தையையும் கூறுபவர்களாக இருந்தார்கள்.
ஷரஹுஸ் ஸுன்னாவில் 5/357 இலக்கமிட்டு பகவீ அவர்கள் இதனைப் பதிவு செய்துள்ளார்கள், மற்றும் அப்துர் ரஜ்ஜாக் 6588 இலக்கமிட்டுப் பதிவு செய்துள்ளார்கள்.

## 57 – دُعَـــاءُ التَّعْـــزِيَةِ

## 57. துக்கம் விசாரிக்கின்ற போது துஆ

162- ((إِنَّ لِلَّهِ مَا أَخَذَ، وَلَهُ مَا أَعْطَى، وَكُلُّ شَيْءٍ عِنْدَهُ بِأَجَلٍ مُسَمًّى... فَلْتَصْبِرْ وَلْتَحْتَسِبْ))

(162) இன்ன லில்லாஹி மா அகத, வலஹு மா அஃதா, வகுல்லு ஷையின் இன் தஹு பி அஜலின் முஸம்மா, ஃபல் தஸ்பிர், வல் தஹ்தஸிப்

பொருள் : நிச்சயமாக அல்லாஹ்விற்கே - அவன் எடுத்துக் கொண்டது - உரியதாகும்; அவன் கொடுத்ததும் அவனுக்கே உரியதாகும்; ஒவ்வொரு பொருளும் அவனிடம் தவணை குறிக்கப்பட்டதாகும்; ஆகவே, பொறுமையோடு இருப்பீராக! நன்மையையும் எண்ணிக் கொள்வீராக!
நூல்கள்: புகாரீ 2/80, முஸ்லிம் 2/636

وَإِنْ قَالَ: ((أَعْظَمَ اللَّهُ أَجْرَكَ، وَأَحْسَنَ عَزَاءَكَ، وَغَفَرَ لِمَيِّتِكَ)) فَحَسَنٌ
அஃழமல்லாஹு அஜ்ரக, வ அஹ்ஸன அஜாஅக, வ ஃகஃபர லி மய்யிதிக

பொருள் : அல்லாஹ், உம்முடைய கூலியை மகத்தானதாக ஆக்கி வைப்பானாக! உம்முடைய துக்கத்திற்கு ஆறுதலும் அளிப்பானாக! உம்முடைய மய்யித்திற்கு அவன் பாவம் பொருத்தருள்வானாக! என்று கூறினாலும் அழகானதாகும்.
நூல்: இமாம் நவவீக்குரிய அத்கார் பக்கம் 126 காண்க!

٥٨ - الدُّعَاءُ عِنْدَ إِدْخَالِ الْمَيِّتِ الْقَبْرَ

## 58. மய்யித்தை கப்ரினுள் நுழைக்குமிடத்து துஆ

163- ((بِسْمِ اللَّهِ وَعَلَى سُنَّةِ رَسُولِ اللَّهِ))

(163) பிஸ்மில்லாஹி வஅலா சுன்னத்தி ரசூலில்லாஹி.

பொருள் : அல்லாஹ்வின் பெயரால் மற்றும் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய வழி முறையின்படி (இந்த மய்யித்தை நுழைவிக்கிறோம்).

நூல்கள்: அபூதாவூது 3/314 சரியான அறிவிப்புத் தொடருடன் மற்றும் அஹ்மது 'பிஸ்மில்லாஹி வஅலா மில்லத்தி ரசூலில்லாஹி' என்ற வாக்கியத்துடன் பதிவு செய்துள்ளார்கள்; அதன் அறிவிப்புத் தொடரும் சரியானதாகும்; மில்லத் என்ற வார்த்தை இந்த அறிவிப்பில் இடம் பெற்றுள்ளது. மில்லத் என்பதன் பொருள் மார்க்கம் என்பதாகும்.

٥٩ - الدُّعَاءُ بَعْدَ دَفْنِ الْمَيِّتِ

## 59. மய்யித்தை அடக்கம் செய்த பிறகு துஆ

164- ((اللَّهُمَّ اغْفِرْ لَهُ، اللَّهُمَّ ثَبِّتْهُ))

(164) அல்லாஹும்ம மஃக் ஃபிர் லஹு, அல்லாஹும்ம தப்பித்ஹு.

பொருள் : யாஅல்லாஹ்! அவருக்குப் பாவம் பொருத்தருள்வாயாக! யாஅல்லாஹ்! (முன்கர் மற்றும் நகீர் ஆகிய மலக்குகள் கேட்கின்ற கேள்விக்கு நாக்குளராது பதில் கூற) அவரை ஸ்திரப்படுத்தி வைப்பாயாக!

குறிப்பு: மய்யித்தை அடக்கம் செய்து விடும் பொழுது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அங்கு நின்று உங்களுடைய சகோதரருக்காக பாவ மன்னிப்புத் தேடுங்கள், ஸ்திரத்தையும் அவருக்காக கேளுங்கள்; ஏனெனில், நிச்சயமாக அவர் இப்போது கேள்வி கேட்கப்படுகிறார் என்று கூறுவார்கள்.

நூல்கள்: 3/315 அபூதாவூது மற்றும் ஹாகிம், அதை அவர்கள் சரியானதெனவும் கூறி 1/370 இலக்கமிட்டு தஹபீ அவர்களும் அதற்கு ஒப்புதல் தெரிவித்துள்ளார்கள்.

60 – دُعَـاءُ زِيَــــارَةِ الْقُــبُورِ

## 60. கப்ருகளை ஜியாரத் செய்யும்போது துஆ

165- ((السَّلاَمُ عَلَيْكُمْ أَهْلَ الدِّيَارِ، مِنَ الْمُؤْمِنِينَ وَالْمُسْلِمِينَ، وَإِنَّا إِنْ شَاءَ اللَّهُ بِكُمْ لاَحِقُونَ، [وَيَرْحَمُ اللَّهُ الْمُسْتَقْدِمِينَ مِنَّا وَالْمُسْتَأْخِرِينَ] أَسْأَلُ اللَّهَ لَنَا وَلَكُمُ الْعَافِيَةَ))

(165) அஸ்ஸலாமு அலைக்கும் அஹ்லத் தியாரி, மினல் (முஃமினீன வல் முஸ்லிமீன, வஇன்னா இன்ஷா அல்லாஹு பிகும் லாஹிகூன் (வயர்ஹமுல்லாஹுல் முஸ்தக்திமீன மின்னா வல் முஸ்தஃகிரீன) அஸ்அலுல்லாஹ லனா வலகுமுல் ஆஃபியா.

பொருள் : விசுவாசிகள் மற்றும் முஸ்லிம்களிலுள்ள வீடுகளை உடையோரே! உங்கள் மீது ஸலாம் உண்டாவதாக! நிச்சயமாக நாங்களும் அல்லாஹ் நாடினால் (உங்களோடு வந்து) சேரக்கூடியவர்கள், (நம்மில் முந்தியவர்களுக்கும், பிந்தியவர்களுக்கும் அல்லாஹ் அருள் செய்வானாக!) எங்களுக்கும், உங்களுக்கும் அல்லாஹ்விடம் சுகத்தைக் கேட்கிறேன்.

நூல்கள்: முஸ்லிம் மற்றும் இப்னுமாஜா, வாக்கியத்தொடர் அவருக்குரியதாகும்; அறிவிப்பாளர் புரைதா ரளியல்லாஹு அன்ஹு அவர்கள்; அடைக்குறிக்குள் இருப்பவை ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா அவர்களுடைய ஹதீஸிலிருந்து 2/671 முஸ்லிமிடம் உள்ளதாகும்.

61 – دُعَـــاءُ الرِّيــــحِ

## 61. காற்று, புயல் வீசுகின்ற போது துஆ

166-[1] ((اللَّهُمَّ إِنِّي أَسْـــــأَلُكَ خَيْرَهَا، وَأَعُوذُ بِكَ مِنْ شَرِّهَا))

(166) 1. அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக கைரஹா, வ அஊது பிக மின் ஷர்ரிஹா.

பொருள் : யாஅல்லாஹ்! நிச்சயமாக அ(க் காற்றான) தன் நன்மையை உன்னிடம் நான் கேட்கிறேன்; அதன் தீமையிலிருந்தும் உன்னைக் கொண்டு நான் காவல் தேடுகிறேன்.

நூல்கள்: அபூதாவூது 4/326, இப்னுமாஜா 2/1228 ஆகியோர் இதனைப் பதிவு செய்துள்ளனர்; ஸஹீஹ் இப்னுமாஜா 2/305ம் காண்க!

167-[2] ((اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ خَيْرَهَا، وَخَيْرَ مَا فِيهَا، وَخَيْرَ مَا أُرْسِلَتْ بِهِ، وَأَعُوذُ بِكَ مِنْ شَرِّهَا، وَشَرِّ مَا فِيهَا، وَشَرِّ مَا أُرْسِلَتْ بِهِ))

(167) 2. அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக கைரஹா, வகைர மா ஃபீஹா, வ கைர மா உர்ஸிலத் பிஹி, வ அஊது பிக மின் ஷர்ரிஹா, வ ஷர்ரி மா ஃபீஹா, வ ஷர்ரி மா உர்ஸிலத் பிஹி.

பொருள் : யாஅல்லாஹ்! நிச்சயமாக நான் அ(க் காற்றான) தன் நன்மையை, அதிலே உள்ள நன்மையை மற்றும் எதற்காக அது அனுப்பப்பட்டுள்ளதோ அதன் நன்மையையும் உன்னிடம் நான் கேட்கிறேன்; இன்னும், அதன் தீமை, அதிலே உள்ள தீமை எதற்காக அது அனுப்பப் பட்டதோ அதன் தீ மையிலிருந்தும் உன்னைக் கொண்டு நான் காவல் தேடுகிறேன்.

62 - دُعَـاءُ الرَّعْـدِ

## 62. இடி இடிக்கின்ற போது துஆ

168- ((سُبْحَانَ الَّذِي يُسَبِّحُ الرَّعْدُ بِحَمْدِهِ وَالْمَلاَئِكَةُ مِنْ خِيفَتِهِ))

(168) ஸுப்ஹானல்லதீ யுஸப்பிஹுர் ரஃது பிஹம்திஹி, வல் மலாயிகத்து மின் கீஃபதிஹி.

பொருள்: அவன் தூயவன், அவன் எத்தகையவனென்றால் அவனின் புகழைக் கொண்டு இடி துதிக்கிறது. மற்றும் மலக்குகள் அவனின் பயத்தால் துதிக்கின்றனர்.

நூல்: அப்துல்லாஹ் பின் ஜுபைர் ரளியல்லாஹு அன்ஹுமா அவர்கள் இடி சப்தத்தைச் செவியேற்றால் பேசுவதை விட்டு விட்டு இதைக் கூறுவார்கள். முஅத்தா 2/992. அல்பானீ அவர்கள் அறிவிப்புத் தொடர் நபித் தோழர் வரை நிறுத்தப்பட்டுள்ளது என்பது சரியானதாகும் என்று கூறியுள்ளார்கள்.

63 - مِنْ أَدْعِيَةِ الاسْتِسْقَاءِ

## 63. மழை வேண்டி துஆ

169-[1] ((اللَّهُمَّ اسْقِنَا غَيْثاً مُغِيثاً مَرِيئاً مَرِيعاً، نَافِعاً غَيْرَ ضَارٍّ، عَاجِلاً غَيْرَ آجِلٍ))

(169) 1. அல்லாஹும்ம அஸ்கினா ஃகைஸன் முஃகீஸன், மரீஅன், மரீஃஅன், நாஃபிஅன், ஃகைர ளார்ரின், ஃஆஜிலன், ஃகைர ஆஜிலின்.

பொருள்: யாஅல்லாஹ்! உதவியாக இருக்கக்கூடிய, செழிப்படையச் செய்யக் கூடிய, பச்சைப்பசுமையை ஏற்படுத்தக் கூடிய, இடரு செய்யாது பலன் தரக்கூடிய மழையாக, தாமிதமின்றி துரிதமாக எங்களுக்கு மழை பெய்யச் செய்வாயாக!

நூல்கள்: அபூதாவூது 1/303, ஸஹீஹ் அபீதாவூதில் 1/216 இலக்கத்தில் அல்பானீ அவர்கள் அதைச் சரியானதெனக் கூறியுள்ளார்கள்.

170-(2) ((اللَّهُمَّ أَغِثْنَا، اللَّهُمَّ أَغِثْنَا، اللَّهُمَّ أَغِثْنَا))

(170) 2. அல்லாஹும்ம அஃகிஸ் னா, அல்லாஹும்ம அஃகிஸ்னா, அல்லாஹும்ம அஃகிஸ்னா.

பொருள் : யா அல்லாஹ்! எங்களுக்கு மழை பொழியச் செய்வாயாக! யா அல்லாஹ்! எங்களுக்கு மழை பொழியச் செய்வாயாக! யா அல்லாஹ்! எங்களுக்கு மழை பொழியச் செய்வாயாக!
நூல்கள்: புகாரீ 1/224, முஸ்லிம் 2/613.

171-(3) ((اللَّهُمَّ اسْقِ عِبَادَكَ، وَبَهَائِمَكَ، وَانْشُرْ رَحْمَتَكَ، وَأَحْيِي بَلَدَكَ الْمَيِّتَ))

(171) 3. அல்லாஹும்மஸ்கி இபாதக, வ பஹாயிமக வன்ஷுர் ரஹ்மதக, வ அஹ்யி பலதகல் மய்யித.

பொருள்: யா அல்லாஹ்! உன்னுடைய அடியார்கள், மற்றும் உன்னுடைய கால் நடைகளுக்கு தண்ணீர் புகட்டுவாயாக! உன்னுடைய அருளைப்பரத்தவும் செய்வாயாக! அழிந்துவிட்ட உன்னுடைய ஊரை உயிர்ப்பிக்கவும் செய்வாயாக!
நூல்கள்: அபூதாவூது 1/305, ஸஹீஹ் அபீதாவூதில் அல்பானீ அவர்கள் 1/218ல் அழகானதெனவும் கூறியுள்ளார்கள்.

## 64 - الدُّعَاءُ إِذَا رَأَى الْمَطَرَ

## 64. மழை பெய்துவிடும் போது துஆ

172- ((اللَّهُمَّ صَيِّباً نَافِعاً))

(172) அல்லாஹும்ம ஸய்யிபன் நாஃபிஅன்.
பொருள் : பயன் தரக்கூடிய மழையாக யா அல்லாஹ்! (நீ ஆக்கி வைப்பாயாக!)
நூல் : ஃபத்ஹுடன் புகாரீ 2/518.

## 65 - الذِّكْرُ بَعْدَ نُزُولِ الْمَطَرِ

## 65. மழை பெய்தபிறகு கூறப்பட வேண்டியது

173- ((مُطِرْنَا بِفَضْلِ اللَّهِ وَرَحْمَتِهِ))

(173) முதிர்னா பி ஃபள்லில்லாஹி வரஹ்மதிஹி.
பொருள்: அல்லாஹ்வின் பேரருள் மற்றும் அவனின் அருளால் நாங்கள் மழை பொய்விக்கப்பட்டோம் . நூல்கள்: புகாரீ 1/205, முஸ்லிம் 1/83

66 - مِنْ أَدْعِيَةِ الاسْتِصْحَاءِ

## 66. வானம் வெளுக்க (மழை நிற்க) வேண்டி துஆ

174- ((اللَّهُمَّ حَوَالَيْنَا وَلاَ عَلَيْنَا، اللَّهُمَّ عَلَى الآكَامِ وَالظِّرَابِ، وَبُطُونِ الْأَوْدِيَةِ، وَمَنَابِتِ الشَّجَرِ))

(174) அல்லாஹும்ம ஹவாலைனா, வலா அலைனா, அல்லாஹும்ம அலல் ஆகாமி, வழ் ழிராபி, வபுதூனில் அவ்தியத்தி, வமனாபித்திஷ் ஷஜரி.

பொருள்: எங்களைச் சுற்றி (மழை பெய்விப்பாயாக) எங்கள் மீது (கேடு விளைவிக்கக் கூடியதாக) அல்ல. யாஅல்லாஹ் சிறிய குன்றுகள், மலைகள், ஓடைப் பகுதிகளிலுள்ள உட்பகுதிகள் மரங்கள் முளைக்குமிடங்கள் ஆகியவற்றின் மீது (மழை பெய்விப்பாயாக)
நூல்கள் புகாரீ 1/224, முஸ்லிம் 2/614

67 - دُعَاءُ رُؤْيَةِ الهِلاَلِ

## 67. தலைப்பிறையைக் காணுகின்ற போது துஆ

175- ((اللهُ أَكْبَرُ، اللَّهُمَّ أَهِلَّهُ عَلَيْنَا بِالْأَمْنِ وَالْإِيمَانِ، وَالسَّلاَمَةِ وَالْإِسْلاَمِ، وَالتَّوْفِيقِ لِمَا تُحِبُّ رَبَّنَا وَتَرْضَى، رَبُّنَا وَرَبُّكَ اللهُ))

(175) அல்லாஹு அக்பர், அல்லாஹும்ம அஹில்லஹு அலைனா பில் அம்னி, வல் ஈமானி, வஸ்ஸலாமத்தி, வல்இஸ்லாமி, வத்தவ் ஃபீகி லிமா துஹிப்பு ரப்பனா வதர்ளா, ரப்புனா வரப்புகல்லாஹு

பொருள்: அல்லாஹு மிகப்பெரியவன், யாஅல்லாஹ் அமைதி, ஈமான், சாந்தி, இஸ்லாம் ஆகியவற்றைக் கொண்டு மற்றும் எங்களின் இரட்சகா நீ விரும்பி மற்றும் பொருந்திக் கொண்டவற்றுக்கு நல்லுதவி செய்வது கொண்டு அ(ப்பிறையான)தை எங்கள் மீது உதிக்கச் செய்வாயாக (பிறையே!) எங்களுடைய இரட்சகன் மற்றும் உன்னுடைய இரட்சகன் அல்லாஹ் ஆவான். நூல்கள் திர்மிதீ 5/504, தாரமீ அதே வார்த்தைகளுடன் 1/336 லஹீஹ் அத்திர்மிதீ 3/157 காண்க!

68 - الدُّعَاءُ عِنْدَ إِفْطَارِ الصَّائِمِ

## 68. பிஸ்மில்லாஹ் என்று கூறி நோன்பு துறந்த பின் ஓதும் துஆ

176-(1) ((ذَهَبَ الظَّمَأُ وَابْتَلَّتِ العُرُوقُ، وَثَبَتَ الْأَجْرُ إِنْ شَاءَ اللَّهُ))

(176) 1. தஹபழ்ழமஉ, வப்தல்லதில் உரூக்கு, வஸபதல் அஜ்ரு இன்ஷா அல்லாஹ்.

பொருள்: தாகம் போய்விட்டது, நரம்புகளும் நனைந்து விட்டன, அல்லாஹ் நாடினால் கூலியும் நிரூபணமாகி விட்டது.
2/306 ல் அபூதாவூது மற்றும் அவரல்லாதோர் பதிவு செய்துள்ளனர், ஸஹீஹ் அல்ஜாமிஃ 4 / 209ம் காண்க!

177-(2) ((اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ بِرَحْمَتِكَ الَّتِي وَسِعَتْ كُلَّ شَيْءٍ أَنْ تَغْفِرَ لِي))

(177) 2. அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக பிரஹ்மதிகல்லதீ வஸிஅத் குல்ல ஷையின் தஃக் ஃபிரலீ.

பொருள்: யாஅல்லாஹ்! ஒவ்வொரு பொருளிலும் விசாலமாகி இருக்கின்றதே அத்தகைய உன்னுடைய அருளைக் கொண்டு எனக்கு நீ பாவம் பொருத்தருளுமாறு நிச்சயமாக உன்னிடம் நான் கேட்கிறேன்.
நூல்கள்: அப்துல்லாஹ் பின் அம்ரு ரளியல்லாஹு அன்ஹுமா அவர்களின் துஆவிலிருந்து இதனை இப்னுமாஜா 2 /306ல் பதிவு செய்துள்ளார்கள், அத்காரின் ஹதீஸ்ளை பரிசீலித்த ஹாபிள் அவர்கள் அழகான தரத்தை உடையதெனக் கூறியுள்ளார்கள். ஷரஹுல் அத்கார் 4/342 காண்க!

69 - الدُّعَاءُ قَبْلَ الطَّعَامِ

## 69. உணவு உண்ணும்போது துஆ

178-(1) ((إِذَا أَكَلَ أَحَدُكُمْ طَعَاماً فَلْيَقُلْ بِسْمِ اللَّهِ، فَإِنْ نَسِيَ فِي أَوَّلِهِ فَلْيَقُلْ بسمِ اللَّهِ فِي أَوَّلِهِ وَآخِرِهِ))

178) 1. உங்களில் ஒருவர் உணவு உண்டால் (1) "பிஸ்மில்லாஹ்' என்று கூறவும், அதன் ஆரம்பத்தில் கூற அவர் மறந்து விட்டால் "பிஸ்மில்லாஹி ஃபீ அவ்வலிஹி வஆகிரிஹி' (2) என அவர் கூறவும்.
பொருள்: (1) அல்லாஹ்வின் பெயரால் (உண்ணுகிறேன்) (2) அதன் தொடக்கம் அதன் முடிவு ஆகியவற்றில் பிஸ்மில்லாஹ்.
நூல்கள்: 3 / 347ல் அபூதாவூது, 4 /288ல் திர்மிதீயும் பதிவு செய்துள்ளார்கள், ஸஹீஹ் அத்திர்மிதீ 2 / 167 காண்க!

179-(2) ((مَنْ أَطْعَمَهُ اللَّهُ الطَّعَامَ فَلْيَقُلْ: اللَّهُمَّ بَارِكْ لَنَا فِيهِ وَأَطْعِمْنَا خَيْراً مِنْهُ، وَمَنْ سَقَاهُ اللَّهُ لَبَناً فَلْيَقُلْ اللَّهُمَّ بَارِكْ لَنَا فِيهِ وَزِدْنَا مِنْهُ))

(179) 2. எவராவது ஒருவருக்கு அல்லாஹ் உணவளித்தால், (1) அல்லாஹும்ம பாரிக் லனா ஃபீஹி, வஅத்யிம்னா கைரன் மின்ஹு, என்று கூறவும், (2) இன்னும் பாலை ஒருவருக்கு அல்லாஹ் பருகக் கொடுத்தால், அல்லாஹும்ம பாரிக் லனா ஃபீஹி, வஜித்னா மின்ஹு எனக் கூறவும்.

பொருள் : (1) யாஅல்லாஹ்! அதில் எங்களுக்கு நீ பரகத்துச் செய்வாயாக! அதை விடச் சிறந்ததை எங்களுக்கு உண்ணக் கொடுப்பாயாக!
(2) யாஅல்லாஹ்! அதில் எங்களுக்கு பரகத்துச் செய்வாயாக! அதிலிருந்து எங்களுக்கு நீ அதிகப்படுத்துவாயாக! நூல்கள் : திர்மிதீ 5 / 506, லஹீஹ் அத்திர்மிதீ 3 /158ம் காண்க!

## 70 – الدُّعَاءُ عِنْدَ الْفَرَاغِ مِنَ الطَّعَامِ

## 70. உணவை உண்டு முடித்த பின் துஆ

180-(1) ((الْحَمْدُ لِلَّهِ الَّذِي أَطْعَمَنِي هَذَا، وَرَزَقَنِيهِ، مِنْ غَيْرِ حَوْلٍ مِنِّي وَلاَ قُوَّةٍ))

(180) 1. அல்ஹம்து லில்லாஹில்லதீ அத்அமனீ ஹாதா வரஜகனீஹி, மின் ஃகைரி ஹவ்லின் மின்னீ வலா குவ்வத்தின்.

பொருள்: என்னிலிருந்துள்ள முயற்சி மற்றும் என் பலமின்றி எனக்கு இதை உண்ணக் கொடுத்து, அதை வழங்கவும் செய்தவனாகிய அல்லாஹ்விற்கே புகழனைத்தும் உரித்தாகுக!
நூல்கள்: அபூதாவூது இப்னுமாஜா ஆகியோர், ஸஹீஹ் அத்திர்மிதீ 3 / 159ம் காண்க!

181-(2) ((الْحَمْدُ لِلَّهِ حَمْداً كَثِيراً طَيِّباً مُبَارَكاً فِيهِ، غَيْرَ [مَكْفِيٍّ وَلاَ ] مُوَدَّعٍ، وَلاَ مُسْتَغْنَىً عَنْهُ رَبَّنَا))

(181) 2. அல்ஹம்து லில்லாஹி ஹம்தன் கஸீரன் தய்யிபன் முபாரக்கன் ஃபீஹி ஃகைர மக்ஃபிய்யின் வலா முவத்தஇன் வலா முஸ்தாஃக்னின் அன்ஹு ரப்பனா.

பொருள்: புகழ் அனைத்தும் அல்லாஹ்விற்கே அநேகப் புகழ்களாக (அவை) நல்லவையாக, அவற்றில் பரகத்துச் செய்யப்பட்டதாக, போதுமாக்கப்பட்டதாக இல்லாததாக, விடப்படவும் முடியாததாக அவற்றை விட்டும் தேவையற்றும் இருக்க முடியாததாக எங்களுடைய இரட்சகா!
நூல்கள்: புகாரீ 6 / 214 திர்மிதீ 5 / 507.

71 – دُعَاءُ الضَّيْفِ لِصَاحِبِ الطَّعَامِ

## 71. உணவளித்தவருக்காக விருந்தாளியின் துஆ

182- ((اللَّهُمَّ بَارِكْ لَهُمْ فِيمَا رَزَقْتَهُمْ، وَاغْفِرْ لَهُمْ وَارْحَمْهُمْ))

(182) அல்லாஹும்ம பாரிக் லஹும் ஃபீமா ரஜக்தஹும், வஃக் ஃபிர்லஹும் வர்ஹம்ஹும்.

பொருள் : யாஅல்லாஹ்! அவர்களுக்கு நீ வழங்கியவற்றில் நீ பரகத்துச் செய்வாயாக! அவர்களுக்கு நீ பாவம் பொருத்தரு ளவும் செய்வாயாக! அவர்களுக்கு நீ அருளும் செய்வாயாக!
நூல் : முஸ்லிம் 3 / 1615.

72 – التَّعْرِيضُ بِالدُّعَاءِ لِطَلَبِ الطَّعَامِ أَوِ الشَّرَابِ

## 72. உணவு அளித்தவருக்கு செய்யும் துஆ

183- ((اللَّهُمَّ أَطْعِمْ مَنْ أَطْعَمَنِي، وَاسْقِ مَنْ سَقَانِي))

(183) அல்லாஹும்ம அத்யிம் மன் அத்அமனீ, வஸ்கி மன் ஸகானீ

பொருள்: யாஅல்லாஹ்! எனக்கு உணவளித்தவருக்கு நீ உணவளிப்பாயாக! எனக்குப் பருகக் கொடுத்தவருக்கும் நீ பருகக் கொடுப்பாயாக!

73 – الدُّعَاءُ إِذَا أَفْطَرَ عِنْدَ أَهْلِ بَيْتٍ

## 73. குடும்பத்தாரிடம் (எவர் வீட்டிலாவது) நோன்பு திறந்தால் கூற வேண்டிய துஆ

184- ((أَفْطَرَ عِنْدَكُمُ الصَّائِمُونَ، وَأَكَلَ طَعَامَكُمُ الأَبْرَارُ، وَصَلَّتْ عَلَيْكُمُ الْمَلاَئِكَةُ))

(184) அஃப்தர இன்தகுமுஸ்ஸாயிமூன், வ அகல தஆமகுமுல் அப்ரார், வஸல்லத் அலைகுமுல் மலாயிகது.
பொருள்: நோன்பாளர்கள் உங்களிடம் நோன்பு திறந்து விட்டனர், நல்லவர்கள் உங்களுடைய உணவையும் உண்டு விட்டனர், மலாயிகத்துகள் உங்கள் வகைக்கு பிரார்த்தனையும் செய்து விட்டனர்.
நூல்கள்: ஸுனன் அபீதாவூது 3/ 367 இப்னுமாஜா 1 / 556, நஸாயீ அமலுல் யவ்மி வல்லைலாவில் 296 - 298 ல் பதிவு செய்துள்ளனர். இன்னும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எவர் வீட்டிலாவது நோன்பு திறந்தால் அதைக் கூறுவார்கள் என ஆதாரத் தெளிவும் காட்டியுள்ளார்கள். இன்னும் ஸஹீஹ் அபீதாவூது 2 / 730ல் அல்பானீ அவர்கள் சரியான அறிவிப்புத் தொடர் எனவும் கூறியுள்ளார்கள்.

## 74 – دُعاءُ الصَّائِمِ إِذَا حَضَرَ الطَّعامُ وَلَمْ يُفْطِرْ

## 74. விருந்துணவு (விருந்து கொடுத்தவருக்காகச் செய்யும்) துஆ

185- ((إِذَا دُعِيَ أَحَدُكُمْ فَلْيُجِبْ، فَإِنْ كَانَ صَائِماً فَلْيُصَلِّ، وَإِنْ كَانَ مُفْطِراً فَلْيَطْعَمْ)) ، وَمَعْنَى فَلْيُصَلِّ أَيْ فَلْيَدْعُ.

(185) உங்களில் ஒருவர் (விருந்துண்ண) அழைக்கப் பட்டால் அவர் அதை ஏற்றுக் கொள்ளவும், (ஆனால்) அவர் நோன்பாளராக இருப்பின் துஆச் செய்வார், நோன்பில்லாதவராக அவர் இருப்பின் (விருந்தில் கலந்து கொண்டு) உண்ணவும். நூல் : முஸ்லிம் 2 / 1054

## 75 – مَا يَقُولُ الصَّائِمُ إِذَا سَابَّهُ أَحَدٌ

## 75. நோன்பாளரை ஏசினால், அவர் கூற வேண்டிய துஆ

186- ((إِنِّي صَائِمٌ، إِنِّي صَائِمٌ))

(186) இன்னீ ஸாயிமுன் இன்னீ ஸாயிமுன்
பொருள்: நிச்சயமாக நான் நோன்பாளன், நிச்சயமாக நான் நோன்பாளன். நூல்கள்: ஃபத்ஹுடன் புகாரீ 4 / 103, முஸ்லிம் 2 /806

## 76 – الدُّعَاءُ عِنْدَ رُؤْيَةِ بَاكُورَةِ الثَّمَرِ

## 76. கனிகளின் தொடக்கத்தைக் காணுமிடத்து துஆ

187- ((اللَّهُمَّ بَارِكْ لَنَا فِي ثَمَرِنَا، وَبَارِكْ لَنَا فِي مَدِينَتِنَا، وَبَارِكْ لَنَا فِي صَاعِنَا، وَبَارِكْ لَنَا فِي مُدِّنَا))

(187) அல்லாஹும்ம பாரிக் லனா ஃபீஸமரினா, வபாரிக் லனா ஃபீ மதீனதினா, வபாரிக் லனா ஃபீ ஸாயினா வபாரிக் லனா ஃபீ முத்தினா.

பொருள்: யா அல்லாஹ்! எங்களுடைய கனிகளில் நீ பரகத்துச் செய்வாயாக! எங்களுடைய பட்டணத்திலும் நீ பரகத்துச் செய்வாயாக! எங்களுடைய மரக்கால்களிலும் நீ பரகத்துச் செய்வாயாக! எங்களுடைய (கை அளவையான) முத்துகளிலும் நீ பரகத்துச் செய்வாயாக!
நூல் : முஸ்லிம் 2 / 1000

77 - دُعَـاءُ الْعُـطَاسِ

## 77. தும்மலுக்கு துஆ

188-(1) ((إِذَا عَطَسَ أَحَدُكُم فَلْيَقُلِ الْحَمْدُ لِلَّهِ، وَلْيَقُلْ لَهُ أَخُوهُ أَوْ صَاحِبُهُ: يَرْحَمُكَ اللَّهُ، فَإِذَا))

(188) உங்களில் ஒருவர் தும்மினால், "அல்ஹம்து லில்லாஹ்' (எல்லாப் புகழும் அல்லாஹ்விற்கே) என்று அவர் கூறவும், அவருடைய சகோதரர் அல்லது அவருடன் இருப்பவர் அவருக்காக "யர்ஹமுகல்லாஹ்' (அல்லாஹ் உமக்கு அருள் செய்வானாக) எனக் கூறவும்

قَالَ لَهُ: ((يرحَمُكَ اللَّهُ، فَلْيَقُلْ: يَهْدِيكُمُ اللَّهُ وَيُصْلِحُ بَالَكُمْ))

"யர்ஹமுகல்லாஹு' என அவருக்காக அவர் கூறிவிட்டால் "யஹ்தீகுமுல்லாஹு வ யுஸ்லிஹ் பாலகும்' (உங்களுக்கு அல்லாஹ் நேர்வழி காட்டி, உங்களுடைய காரியங்களை சீராக்கியும் வைப்பானாக!) என்று இவர் கூறவும். நூல் :புகாரி, 7/125

78 - مَا يُقَالُ لِلْكَافِرِ إِذَا عَطَسَ فَحَمِدَ الله

## 78. காஃபிருக்காக - அவர் தும்மி விட்டு "அல்ஹம்து லில்லாஹ்' எனக் கூறினால்.....

189-(2) ((يَهْدِيكُمُ اللَّهُ وَيُصْلِحُ بَالَكُمْ))

(189) யஹ்தீகுமுல்லாஹு, வ யுஸ்லிஹ் பாலகும்.

பொருள் : அல்லாஹ் உங்களுக்கு நேர்வழி காட்டி, உங்களுடைய காரியங்களை சீராக்கியும் வைப்பானாக!
நூல்கள் : திர்மிதீ 5/ 82 அஹ்மது 4/ 400 அபூதாவூது 4 /308 ஆகியோர் பதிவு செய்துள்ளார்கள், ஸஹீஹ் அத்திர்மிதீ 2/ 354ம் காண்க!

79 - الدُّعَـاءُ لِلْمُتَـزَوِّجِ

## 79. திருமணம் செய்து கொண்டவருக்கு துஆ

190- ((بَارَكَ اللَّهُ لَكَ، وَبَارَكَ عَلَيْكَ، وَجَمَعَ بَيْنَكُمَا فِي خَيْرٍ))

(190) பாரகல்லாஹு லக, வபாரக அலைக, வஜமஅ பைனகுமா ஃபீ கைரின்.
பொருள்: அல்லாஹ் உமக்கு பரக்கத்துச் செய்வானாக! உம்மீதும் பரக்கத்துச் செய்வானாக! நலவானவற்றில் உங்களிருவருக்கிடையே அவன் இணைத்து வைப்பானாக!
நூல்கள்: அபூதாவூது, திர்மிதீ, இப்னுமாஜா ஆகியோர் மற்றும் ஸஹீஹ் அத்திர்மிதீ 1 /316 காண்க!

80 – دُعَـاءُ المُـتَزَوِّجِ وَشِـرَاءِ الدَّابَّةِ

## 80. திருமணமானவர் மற்றும் கால் நடையை வாங்கியவர் கூற வேண்டிய துஆ

(191) உங்களிலொருவர் ஒரு பெண்ணைத் திருமணம் முடித்தால் அல்லது ஒரு பணியாளரை வாங்கினால்

191- إِذَا تَزَوَّجَ أَحَدُكُمُ امْرَأَةً، أَوْ إِذَا اشْتَرَى خَادِماً فَلْيَقُلْ: ((اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ خَيْرَهَا، وَخَيْرَ مَا جَبَلْتَهَا عَلَيْهِ، وَأَعُوذُ بِكَ مِنْ شَرِّهَا، وَشَرِّ مَا جَبَلْتَهَا عَلَيْهِ، وَإِذَا اشْتَرَى بَعِيراً فَلْيَأْخُذْ بِذِرْوَةِ سَنَامِهِ وَلْيَقُلْ مِثْلَ ذَلِكَ))

அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக கைரஹா வகைர மா ஜபல்தஹா அலைஹி, வ அஊது பிக மின் ஷர்ரிஹா வஷர்ரி மா ஜபல்தஹா அலைஹி என்றும், ஒட்டகத்தை அவர் வாங்கினால் அதனுடைய திமிலின் மேல் பகுதியைப் பிடித்துக் கொண்டு அதைப் போன்றே கூறவும்.

பொருள்: யா அல்லாஹ்! இதன் நன்மையையும் இதன் மூலம் நீ ஏற்படுத்திவைத்த நலமானவற்றையும் நான் உன்னிடம் கேட்கிறேன். இதன் தீங்கையும் இதனால் ஏற்படும் தீங்கையும் விட்டு உன்னிடம் காவல் தேடுகிறேன்.
நூல்கள்: அபூதாவூது 2 /248, இப்னுமாஜா 1/ 617 ஸஹீஹ் இப்னுமாஜா 1/324 காண்க!

81 – الدُّعَاءُ قَبْلَ إِتْيَانِ الزَّوْجَةِ

## 81. மனைவியிடம் செல்வதற்கு முன்பு துஆ

192- ((بِسْمِ اللَّهِ، اللَّهُمَّ جَنِّبْنَا الشَّيْطَانَ، وَجَنِّبِ الشَّيْطَانَ مَا رَزَقْتَنَا))

(192) பிஸ்மில்லாஹி அல்லாஹும்ம ஜன்னிப்னஷ் ஷைத்தான, வ ஜன்னிபிஷ் ஷைத்தான மா ரஜக்தனா.
பொருள்: அல்லாஹ்வின் பெயரால் (சேர்கிறேன்) யாஅல்லாஹ்! ஷைத்தானை எங்களை விட்டும் தவிர்ப்பாயாக! எங்களுக்கு நீ (வாரிசு) வழங்குவதிலும் ஷைத்தானைத் தவிர்ப்பாயாக!
நூல்கள்: புகாரீ 6/141, முஸ்லிம் 2/ 1028

82 – دُعَـاءُ الغَـضَبِ

## 82. கோபம் நீங்க துஆ

193- ((أَعُوذُ بِاللَّهِ مِنَ الشَّيْطَانِ الرَّجِيمِ))

(193) அஊது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம்.
பொருள்: எறியப்பட்ட ஷைத்தானி(ன் தீமை)யிலிருந்து அல்லாஹ்வைக் கொண்டு காவல் தேடுகிறேன். நூல்கள்: புகாரீ 7 / 99 முஸ்லிம் 4/ 2015

83 - دُعَـاءُ مَنْ رَأَى مُبْتَلًى

## 83. (நோயினால்)சோதனைக்குள்ளாக்கப்பட்டவரைக் காணுகின்றவருக்கு துஆ

194- ((الْحَمْدُ لِلَّهِ الَّذِي عَافَانِي مِمَّا ابْتَلاَكَ بِهِ، وَفَضَّلَنِي عَلَى كَثِيرٍ مِمَّنْ خَلَقَ تَفْضِيلاً))

(194) அல்ஹம்து லில்லாஹில்லதீ ஆஃபானீ மிம்மப் தலாக பிஹி, வஃபள்ளலனீ அலா கஸீரின் மிம்மன் கலகத ஃப்ளீலா
பொருள் : எதனால் உம்மை சோதித்துள்ளானோ அதிலிருந்து எனக்கு ஆரோக்கியத்தை நல்கி அவன் படைத்தவற்றிலுள்ள அநேகரை விட என்னை மிகுந்து சிறப்பாக்கி வைத்தவனாகிய அல்லாஹ்விற்கு புகழ் அனைத்தும் உரித்தாகுக!
நூல்கள் : திர்மிதீ 5/ 493,494 ஸஹீஹ் அத்திர்மிதீ 3/ 153 காண்க!

84 - مَـا يُقَـالُ فِي المَجْلِسِ

## 84. அமர்விடத்தில் கூறப்படுவது

(195) இப்னு உமர் ரளியல்லாஹு அன்ஹு அறிவித்துக் கூறுகிறார்கள்: ஒரு அமர்வில் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு, அவர்கள் எழு முன்பு,
195- ((عَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: كَانَ يُعَدُّ لِرَسُولِ اللَّهِ صلى الله عليه وسلم فِي الْمَجْلِسِ الوَاحِدِ مِائَةُ مَرَّةٍ مِنْ قَبْلِ أَنْ يَقُومَ: ((رَبِّ اغْفِرْ لِي، وَتُبْ عَلَيَّ، إِنَّكَ أَنْتَ التَّوَّابُ الغَفُورُ))
ரப்பிஃக் ஃபிர்லீ வதுப் அலைய்ய இன்னக்க அன்த்தத் தவ்வாபுல் ஃக ஃபூர் என்று நூறு தடவை (அவர்கள் கூறுவதை) கணக்கிடப்பட்டது.
பொருள் : என் இரட்சகா! என் பாவம் பொருத்தருள்வாயாக! என் தவ்பாவை அங்கீகரித்தும் கொள்வாயாக! நிச்சயமாக நீதான் தவ்பாக்களை மிகுந்து அங்கீகரிப்பவன், மிகுந்து மன்னிப்பவன்.
நூல்கள்: திர்மிதீ, ஸஹீஹ் அத்திர்மிதீ 3/ 153, ஸஹீஹ் இப்னுமாஜா 2/ 321 அதன் வாசகம் திர்மிதிக்குரியதாகும்.

85 - كَفَّـارَةُ المَـجْلِسِ

## 85. சபை கலையும் போது ஓதும் துஆ (அமர்விடத்தில் ஏற்பட்டவற்றுக்குப் பரிகாரம்)

196- ((سُبْحَانَكَ اللَّهُمَّ وَبِحَمْدِكَ، أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ أَنْتَ، أَسْتَغْفِرُكَ وَأَتُوبُ إِلَيْكَ))

(196) ஸுப்ஹானகல் லாஹும்ம வபிஹம்திக அஷ்ஹது அன்லாயிலாஹ இல்லா அன்த்த அஸ்தஃக் ஃபிருக வ அதுதூ பு இலைக

பொருள் : யாஅல்லாஹ்! உன்னைத் துதிக்கிறேன் உன் புகழைக் கொண்டும், வணங்கப்படுபவன் உன்னையன்றி யாரும் இல்லை என்று நான் சாட்சி கூறுகிறேன் உன்னிடம் பாவம் பொருத்தருளத் தேடுகிறேன், உன்பாலே தவ்பா செய்கிறேன்.

நூல்கள்: திர்மிதீ, அபூதாவூது, நஸாயீ, இப்னுமாஜா ஆகியவை மற்றும், ஸஹீஹ் அத்திர்மிதீ 3/153 மேலும் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், எந்த அமர்விலும் அமர்வதில்லை, குர்ஆனிலிருந்து எதையும் ஓதுவதில்லை, எத்தொழுகையையும் தொழுவதில்லை மேற்கூறப்பட்ட ஹதீஸில் உள்ள வார்த்தைகளைக் கூறியே தவிர, என்று ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா அவர்கள் அறிவித்துக் கூறியது நிச்சயமாக நிரூபணம் ஆகியுள்ளது. அதனை 308 இலக்கமிட்டு நஸாயீ அவர்கள் 218 வது பக்கம் அமலுல் யவ்மி வல்லைலாவில் பதிவு செய்துள்ளனர் அமலுல் யவ்மி வல்லைலாவின் ஹதீஸ்களை பரிசீலித்த போது பக்கம் 273ல் டாக்டர் பாரூக் ஹமூதா இதனைச் சரியான தரத்தையுடையதெனக் கூறியுள்ளார்கள்.

### 86 – الدُّعَاءُ لِمَنْ قَالَ غَفَرَ اللهُ لَكَ

### 86. அல்லாஹ் உமக்கு பாவம் பொருத்தருள்வானாக என்று கூறியவருக்கு துஆ

197- ((وَلَكَ))

(197) "வலக' - உமக்கும், என்று கூற வேண்டும்.

நூல்கள் : அஹ்மது 5 /82 அமலுல் யவ்மி வல்லைலாவில் பக்கம் 218, இலக்கம் 421, டாக்டர் ஹமூதாவின் பரிசீலனை நஸாயீலும் பதிவு செய்துள்ளார்கள்.

### 87 – الدُّعَاءُ لِمَنْ صَنَعَ إِلَيْكَ مَعْرُوفاً

### 87. நல்லதைச் செய்தவருக்காக துஆ

198- ((جَزَاكَ اللَّهُ خَيْراً))

(198) ஜஸாகல்லாஹு கைரன்

பொருள்: அல்லாஹ் உமக்கு நற்கூலி வழங்குவானாக!

நூல்கள் : 2035 இலக்கமிட்டு இதனைத் திர்மிதீ பதிவு செய்துள்ளார்கள், ஸஹீஹுல் ஜாமிஉ 6244, ஸஹீஹுத் திர்மிதீ 2/ 200 ஆகிய நூல்களும் காண்க!

### 88 – مَا يَعْصِمُ اللَّهُ بِهِ مِنَ الدَّجَّالِ

### 88. தஜ்ஜாலின் தீமையிலிருந்து பாதுகாப்பளிக்கும் துஆ

199- ((مَنْ حَفِظَ عَشْرَ آيَاتٍ مِنْ أَوَّلِ سُورَةِ الْكَهْفِ عُصِمَ مِنَ الدَّجَّالِ)) ، وَالْاسْتِعَاذَةُ بِاللَّهِ مِنْ فِتْنَتِهِ عَقِبَ التَّشَهُّدِ الْأَخِيرِ مِنْ كُلِّ صَلاَةٍ

(199) அல்கஹ்ஃப் அத்தியாயத்தின் தொடக்கத்திலிருந்து பத்து வசனங்களை மனனம் செய்தவர் தஜ்ஜாலி(ன் தீமையி)லிருந்து பாதுகாக்கப்பட்டவராவார்.

நூல் :முஸ்லிம் 1/555 இன்னொரு அறிவிப்பில் 1/556 இலக்கமிட்டு அல்கஹ்ஃபு அத்தியாயத்தின் கடைசியிலிருந்து பத்து வசனங்கள் என பதிவாகியுள்ளது. மற்றும் ஒவ்வொரு தொழுகையிலும் கடைசி தஷஹ்ஹுதுக்குப் பிறகு அவன் தீமையிலிருந்து பாதுகாவல் தேடுவதாலும் பாதுகாப்புக் கிடைக்கும்.

### 89 – الدُّعَاءُ لِمَنْ قَالَ إِنِّي أُحِبُّكَ فِي اللَّهِ

### 89. அல்லாஹ்விற்காக நிச்சயமாக நான் உம்மை விரும்புகிறேன் என்று கூறியவருக்காக துஆ

200- ((أَحَبَّكَ الَّذِي أَحْبَبْتَنِي لَهُ))

(200) அஹப்பகல்லதீ அஹ்பப்தனீ லஹு

பொருள் : எவனுக்காக என்னை நீர் நேசித்தீரோ, அத்தகையவன் உம்மை நேசிப்பானாக!
நூல்கள்: இதனை அபூதாவூது 4/ 333ல் பதிவு செய்து, ஸஹீஹ் ஸுனன் அபீதாவூது 3 /965ல் அல்பானீ இதன் அறிவிப்புத் தொடர் அழகானதெனக் கூறியுள்ளார்கள்.

### 90 – الدُّعَاءُ لِمَنْ عَرَضَ عَلَيْكَ مَالَهُ

### 90. தன் செல்வத்தை (உதவியின் அடிப்படையில்) உமக்கு எடுத்துக் காட்டிய வருக்கு துஆ

201- ((بَارَكَ اللَّهُ لَكَ فِي أَهْلِكَ وَمَالِكَ))

(201) பாரகல்லாஹு லக ஃபீ அஹ்லிக வமாலிக.

பொருள்: உம்முடைய குடும்பம் மற்றும் உம்முடைய செல்வத்தில் உமக்கு அல்லாஹ் பரகத்துச் செய்வானாக! நூல்: 4 / 88 ஃபத்ஹுடன் புகாரீ.

### 91 – الدُّعَاءُ لِمَنْ أَقْرَضَ عِنْدَ الْقَضَاءِ

### 91. கடன் கொடுத்தவருக்காக கடனை நிறைவேற்றும் போது துஆ

202- ((بَارَكَ اللَّهُ لَكَ فِي أَهْلِكَ وَمَالِكَ، )) إِنَّمَا جَزَاءُ السَّلَفِ الْحَمْدُ وَالأَدَاءُ

(202) பாரகல்லாஹு லக ஃபீ அஹ்லிக வமாலிக.

பொருள்: உம்முடைய குடும்பம் மற்றும் உம்முடைய செல்வத்தில் உமக்கு அல்லாஹ் பரகத்துச் செய்வானாக! கடனுக்குரிய பிரதி உபகாரம் (கடன்) கொடுத்தவரை) போற்றுதல் மற்றும் (கடனை) நிறை வேற்றுதலாகும்.

92 – دُعَاءُ الْخَوْفِ مِنَ الشِّرْكِ

## 92. இணைவைப்பதிலிருந்து பாதுகாக்க துஆ

203- ((اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ أَنْ أُشْرِكَ بِكَ وَأَنَا أَعْلَمُ، وَأَسْتَغْفِرُكَ لِمَا لاَ أَعْلَمُ))

(203) அல்லாஹும்ம இன்னீ அஊது பிக அன் உஷ்ரிக பிக வஅன அஃலமு, வஅஸ்தஃக் ஃபிருக லிமா லா அஃலமு.

பொருள் : யாஅல்லாஹ்! நிச்சயமாக நான், நான் அறிந்து கொண்டே உனக்கு இணை வைப்பதிலிருந்து உன்னைக் கொண்டு நான் காவல் தேடுகிறேன், நான் அறியாதவற்றுக்காக உன்னிடம் பாவம் பொருத்தருளவும் தேடுகிறேன்.

நூல்கள் : 4/403 அஹ்மது மற்றும் அவரல்லாதோர், ஸஹீஹுல் ஜாமிஉ 3/233, அல்பானிக்குரிய ஸஹீஹ் அத்தர்கீப் வத்தர்ஹீப் 1/ 19 ஆகிய நூல்கள் காண்க!

93 – الدُّعَاءُ لِمَنْ قَالَ بَارَكَ اللَّهُ فِيكَ

## 93. அல்லாஹ் உமக்கு பரகத்துச் செய்வானாக! என்றுகூறியவருக்கு துஆ

204- ((وَفِيكَ بَارَكَ اللَّهُ))

(204) வ ஃபீக பாரகல்லாஹ்

பொருள் : அல்லாஹ் உம்மிலும் பரகத்துச் செய்வானாக!

நூல்கள் : இப்னுஸ் ஸுன்னீ 278 இலக்கமிட்டு பக்கம் 138ல் இதனைப் பதிவு செய்துள்ளார்கள். பஷீர் முஹம்மது உயூன் அவர்களுடைய பரிசீலனை - அல்வாபிலுஸ் ஸய்யிப் இப்னுல் கைய்யிம் அவர்களுடைய நூல் பக்கம் 304ல் காண்க.

94 – دُعَاءُ كَرَاهِيَةِ الطِّيَرَةِ

## 94. துர்சகுணத்தை வெறுத்து துஆ

205- ((اللَّهُمَّ لاَ طَيْرَ إِلاَّ طَيْرُكَ، وَلاَ خَيْرَ إِلاَّ خَيْرُكَ، وَلاَ إِلَهَ غَيْرُكَ))

(205) அல்லாஹும்ம லாதைர இல்லா தைருக, வலா கைர இல்லா கைருக, வலா இலாஹ ஃகைருக.

பொருள்: சகுணம் உன் சகுணமல்லாது இல்லை, நன்மையும் உன் நன்மையல்லாது இல்லை, உன்னையன்றி வணங்கப்படு பவனும் இல்லை.

95 – دُعَـاءُ الرُّكُـوبِ

## 95. வாகனத்தில் அமரும் போது துஆ

206- ((بِسْمِ اللَّهِ، وَالْحَمْدُ لِلَّهِ (سُبْحَانَ الَّذِي سَخَّرَ لَنَا هَذَا وَمَا كُنَّا لَهُ مُقْرِنِينَ، وَإِنَّا إِلَى رَبِّنَا لَمُنقَلِبُونَ)، الْحَمْدُ لِلَّهِ، الْحَمْدُ لِلَّهِ، الْحَمْدُ لِلَّهِ، اللَّهُ أَكْبَرُ، اللَّهُ أَكْبَرُ، اللَّهُ أَكْبَرُ، سُبْحَانَكَ اللَّهُمَّ إِنِّي ظَلَمْتُ نَفْسِي فَاغْفِرْ لِي؛ فَإِنَّهُ لاَ يَغْفِرُ الذُّنُوبَ إِلاَّ أَنْتَ))

(206) பிஸ்மில்லாஹி, அல் ஹம்து லில்லாஹி. ஸுப்ஹா னல்லதீ ஸக்கர லனா ஹாதா வமா குன்னா லஹு முக்ரினீன் வஇன்னா இலா ரப்பினா ல முன்கலிபூன். அல்ஹம்து லில்லாஹி, அல்ஹம்து லில்லாஹி, அல்ஹம்து லில்லாஹி, அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர், ஸுப்ஹானகல்லாஹும்ம இன்னீ ழளம்து நஃப்ஸீ ஃப ஃக்ஃபிர்லீ, ஃப இன்னஹு லா யக் ஃபிருத் துனூப இல்லா அன்த்த.

பொருள் : அல்லாஹ்வின் பெயரால் புகழ் அனைத்தும் அல்லாஹ்விற்கே! எங்களுக்கு இதனை வசப்படுத்தித் தந்தவனாகிய அவன் மிக்கப் பரிசுத்தமானவன், (இதன் மீது பிரயாணிக்க அவன் வசப்படுத்தித் தந்திராவிட்டால்) இதற்கு நாங்கள் சக்தி பெற்றவர்களாக இருந்திருக்க மாட்டோம் மேலும், நிச்சயமாக நாம் நம்முடைய இரட்சகன்பால் திரும்பக் கூடியவர்கள். புகழ் அனைத்தும் அல்லாஹ்விற்கே! (என மும்முறை) அல்லாஹ் மிகப்பெரியவன்! (என மும்முறை) யாஅல்லாஹ்! உன்னைத் துதிக்கிறேன். நிச்சயமாக எனக்கு நானே அநீத மிழைத்து விட்டேன் ஆகவே, எனக்காக பாவம் பொருத்தருள்வாயாக! ஏனென்றால் நிச்சயமாக பாவங்களை உன்னைத் தவிர மற்றெவரும் பொருத்தருள மாட்டார்.

96 – دُعَـــاءُ السَّـفَرِ

## 96. பிரயாணத்தின் போது துஆ

207- اللَّهُ أَكْبَرُ، اللَّهُ أَكْبَرُ، اللَّهُ أَكْبَرُ، (سُبْحَانَ الَّذِي سَخَّرَ لَنَا هَذَا وَمَا كُنَّا لَهُ مُقْرِنِينَ * وَإِنَّا إِلَى رَبِّنَا لَمُنقَلِبُونَ) ((اللَّهُمَّ إِنَّا نَسْأَلُكَ فِي سَفَرِنَا هَذَا الْبِرَّ وَالتَّقْوَى، وَمِنَ الْعَمَلِ مَا تَرْضَى، اللَّهُمَّ هَوِّنْ عَلَيْنَا سَفَرَنَا هَذَا وَاطْوِ عَنَّا بُعْدَهُ، اللَّهُمَّ أَنْتَ الصَّاحِبُ فِي السَّفَرِ، وَالْخَلِيفَةُ فِي الأَهْلِ، اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ وَعْثَاءِ السَّفَرِ، وَكَآبَةِ الْمَنْظَرِ، وَسُوءِ الْمُنْقَلَبِ فِي الْمَالِ وَالأَهْلِ))،

(207) அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர், ஸுப்ஹானல்லதீ ஸக்கர லனா ஹாதா வமா குன்னா லஹு முக்ரினீன், வஇன்னா இலா ரப்பினா ல முன்கலிபூன், அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக ஃபீ ஸஃபரினா ஹாதல் பிர்ர வத்தக்வா, வமினல் அமலி மா தர்ளா, அல்லாஹும்ம ஹவ்வின் அலைனா ஸஃபரனா ஹாதா, வத்வி அன்னா புஃதஹு, அல்லாஹும்ம அன்த்தஸ் ஸாஹிபு ஃபிஸ் ஸஃபரி, வல் கலீஃபத்து ஃபில் அஹ்லி. அல்லாஹும்ம இன்னீ அஊது பிக மின் வஃதாயிஸ் ஸஃபரி, வகஆபத்தில் மன்ழரி, வஸூயில் முன்கலபி ஃபில் மாலி வல்அஹ்லி.

பொருள் : அல்லாஹ் மிகப்பெரியவன், அல்லாஹ் மிகப்பெரியவன், அல்லாஹ் மிகப்பெரியவன், எங்களுக்கு இதனை வசப்படுத்தித் தந்தவனாகிய அவன் மிக்கப் பரிசுத்தமானவன், (இதன் மீது பிரயாணிக்க அவன் வசப்படுத்தித் தந்திராவிட்டால்) இதற்கு நாங்கள் சக்தி பெற்றவர்களாக இருக்கவில்லை மேலும், நிச்சயமாக நாம் நம்முடைய இரட்சகன்பால் திரும்பக் கூடியவர்கள் யாஅல்லாஹ்! நிச்சயமாக நாங்கள், நன்மை மற்றும் பயபக்தி, செயலிலிருந்து நீ பொருந்திக் கொள்வதை எங்களுடைய பயணத்தில் உன்னிடம் நாங்கள் கேட்கிறோம் யாஅல்லாஹ்! இந்த எங்களுடைய பிரயாணத்தை எங்களுக்கு எளிதாக்கித் தருவாயாக! அதன் தூரத்தை எங்களுக்கு சுருக்கியும் தருவாயாக! யாஅல்லாஹ்! நீதான் இப்பயணத்தில் தோழன் மற்றும் என் குடும்பத்தினரில் (என்) பிரதிநிதி, யாஅல்லாஹ்! நிச்சயமாக நான், பயணத்தின் களைப்புகளிலிருந்து, தோற்றம் மாறுவதிலிருந்து, செல்வம் மற்றும் குடும்பத் தில் தீய விளைவுகள் ஆகியவற்றிலிருந்து உன்னைக் கொண்டு காவல் தேடுகிறேன்.
நூல் : முஸ்லிம் 2/ 998
இன்னும் (அல் லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் (பயணத்திலிருந்து) திரும்பும் பொழுது (மேற்கூறப்பட்ட) அவற்றையும் கூறிவிட்டு அவற்றோடு,

وإذا رَجَعَ قَالَهُنَّ وَزَادَ فِيهِنَّ: ((آيِبُونَ، تائِبُونَ، عَابِدُونَ، لِرَبِّنَا حَامِدُونَ))

ஆயிபூன, தாயிபூன, ஆபிதூன, லி ரப்பினா ஹாமிதூன என்பதை அதிகப்படுத்துவார்கள்.

பொருள்: (பயணத்திலிருந்து) திரும்பியவர்களாக, தவ்பாச் செய்தவர்களாக, (அல்லாஹ்வை) வணங்கியவர்களாக எங்களுடைய இரட்சகனைப் புகழ்ந்தவர்களாக (திரும்பி விட்டோம்)

## 97 - دُعاءُ دُخُولِ القريَةِ أَوِ البَلْدَةِ

## 97. சிற்றூர் அல்லது நகரத்தில் நுழைகின்ற போது துஆ

208- ((اللَّهُمَّ رَبَّ السَّمَوَاتِ السَّبْعِ وَمَا أَظْلَلْنَ، وَرَبَّ الأَرَضِينَ السَّبْعِ وَمَا أَقْلَلْنَ، وَرَبَّ الشَّيَاطِينِ وَمَا أَضْلَلْنَ، وَرَبَّ الرِّيَاحِ وَمَا ذَرَيْنَ، أَسْأَلُكَ خَيْرَ هَذِهِ الْقَرْيَةِ، وَخَيْرَ أَهْلِهَا، وَخَيْرَ مَا فِيهَا، وَأَعُوذُ بِكَ مِنْ شَرِّهَا، وَشَرِّ أَهْلِهَا، وَشَرِّ مَا فِيهَا))

(208) அல்லாஹும்ம ரப்பஸ் ஸமாவாத்திஸ் ஸப்இ, வமா அழ்லல்ன, வரப்பல் அர்ளீனஸ் ஸப்இ வமா அக்லல்ன, வரப்பஷ் ஷையாதீனி, வமா அள்லல்ன, வரப்பர் ரியாஹி, வமா தரைன, அஸ்அலுக கைர ஹாதிஹில் கர்யத்தி, வ கைர அஹ்லிஹா, வ கைர மா ஃபீஹா, வ அஊது பிக மின் -ஷர்ரிஹா, வஷர்ரி அஹ்லிஹா, வஷர்ரி மா ஃபீஹா.

பொருள்: யாஅல்லாஹ்! ஏழு வானங்கள் மற்றும் அவை நிழல் தந்தவற்றின் இரட்சகனே! இன்னும் ஏழு பூமிகள் மற்றும் அவை சுமந்து கொண்டவற்றின் இரட்சகனே! ஷைத்தான்கள் மற்றும் அவை வழி கெடுத்தவற்றினும் இரட்சகனே! காற்றுகள் மற்றும் அவை பரத்தியவற்றினும், இரட்சகனே! இவ்வூரினுடைய நன்மையையும், இவ்வூராரின் நன்மையையும், இவ்வூரானதில் உள்ள நன்மையையும் உன்னிடம் நான் கேட்கிறேன். இ(வ்வூரான)தன் தீமையிலிருந்தும், இவ்வூராரின் தீமையிலிருந்தும்,அதில் ஏற்படும் தீமையிலிருந்தும் உன்னைக்கொண்டு நான் காவல் தேடுகிறேன்.

நூல்: ஹாகிம் பதிவு செய்து, அதைச் சரியானதெனவும் கூறியுள்ளார்கள், தஹபீ அவர்களும் 2 / 100 ல் அதற்கு ஒப்புதல் தெரிவித்துள்ளார்கள், அத்காரின் ஹதீஸ்களின் பதிவில் ஹாஃபிள் அவர்களும் 5/ 154 இலக்கமிட்டு அதை அழகான தொடர் எனக் கூறியுள்ளார்கள் நஸாயீ அவர்களும் அழகான தொடரில் இதனைப் பதிவு செய்துள்ளார்கள் துஹ் ஃபதுல் அக்யார் பக்கம் 37 காண்க!

## 98 – دُعـاءُ دُخُـولِ السُّـوقِ

## 98. கடைத் தெருவில் பிரவேசிக்கின்ற போது துஆ

209- ((لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ، لَهُ الْمُلْكُ، وَلَهُ الْحَمْدُ، يُحْيِي وَيُمِيتُ، وَهُوَ حَيٌّ لاِ يَمُوتُ، بِيَدِهِ الْخَيْرُ، وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ))

லாயிலஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீக லஹு, லஹுல் முல்கு, வலஹுல் ஹம்து, யுஹ்யீ, வயுமீத்து, வஹுவ ஹைய்யுன் லா யமூத்து, பியதிஹில் கைரு, வஹுவ அலா குல்லி ஷையின் கதீர்.

பொருள் : வணங்கப்படுபவன் அல்லாஹ்வையின்றி (வேறு) இல்லை. ஆட்சி அவனுக்கே உரியது புகழும் அவனுக்கே உரியது உயிர் கொடுக்கிறான் அவனே மரணத்தையும் கொடுக்கிறான் அவனே ஜீவனுள்ளவன் இறப்பெய்தாதவன் நன்மை அவன் கை வசம் உள்ளது அவனே ஒவ்வொரு பொருளின் மீதும் மிக்க ஆற்றலுடையவன்.

## 99 – الدُّعَاءُ إِذَا تَعِسَ المَرْكُوبُ

## 99. ஏறிச் செல்லும் வாகனம் சேதமடைந்து விட்டால் (கூறப்படும்) துஆ

210- ((بِسْمِ اللَّهِ))

(210) "பிஸ்மில்லாஹி ' (அல்லாஹ்வின் பெயரால் என்று கூற வேண்டும்)
நூல்கள் :அபூதாவூது 4/296 ஸஹீஹ் அபீதாவூதுவில் 3/941ல் அல்பானீ இதனைச் சரியானதெனக் கூறியுள்ளார்கள்.

100 – دُعَـاءُ المُسَـافِرِ لِلْمُقِيمِ

## 100. ஊரில் இருப்பவருக்கு பிரயாணியின் துஆ

211- ((أَسْتَوْدِعُكُمُ اللَّهَ الَّذِي لاَ تَضِيعُ وَدَائِعُهُ))

(211) அஸ்தவ்திஉ குமுல்லாஹல்லதீ லா தளீஉ: வதாயி உஹு

பொருள் : அல்லாஹ்விடம் உங்களை நான் ஒப்படைக்கிறேன் அவன் எத்தகையவனென்றால் அவனிடத்தில் ஒப்படைக்கப்பட்டவை வீணாகி விடாது (அவன் அவற்றுக்குப் பாதுகாப்பளிக்கின்றான்)
நூல்கள் : அஹ்மது 2 / 403 , இப்னுமாஜா 2 /943 ஸஹீஹ் இப்னுமாஜா2/133 காண்க!

101 – دُعَـاءُ المُقِيمِ لِلْمُسَـافِرِ

## 101. பிரயாணிப்பவருக்காக ஊரில் இருப்பவர் கூறும் துஆ

212-(1) أَسْتَوْدِعُ اللَّهَ دِينَكَ، وَأَمَانَتَكَ، وَخَوَاتِيمَ عَمَلِكَ))

(212) 1. அஸ்தவ்தி உஃல்லாஹ தீனக, வ அமானதக, வ கவாதீம அமலிக.

பொருள் : உம்முடைய மார்க்கம், உம்முடைய அமானிதம், உம்முடைய செயலில் முடிவுகள் ஆகியவற்றை அல்லாஹ்விடம் நான் ஒப்படைக்கிறேன் .
நூல்கள் அஹ்மது 2/ 7 திர்மிதீ 5 /499 ஸஹீஹ் அத்திர்மிதீ 2 /155ம் காண்க!

213-(2) ((زَوَّدَكَ اللَّهُ التَّقْوَى، وَغَفَرَ ذَنْبَكَ، وَيَسَّرَ لَكَ الْخَيْرَ حَيْثُ ما كُنْتَ))

(213) 2. ஜவ்வதகல்லாஹுத் தக்வா, வ ஃகஃபர தன்பக, வயஸ்ஸர லகல் கைர ஹைஸு மா குன்த்த.

பொருள் : பயபக்தியை வழிச்சாதனமாக அல்லாஹ் உமக்கு ஆக்கித் தருவானாக உம்முடைய பாவத்தையும் பொருத்தருள்வானாக! நீர் எங்கிருந்தாலும் நன்மையை உமக்கு அவன் எளிதாக்கித் தருவானாக!

### 102 - التَّكبيرُ والتَّسبيحُ في سَيْرِ السَّفَرِ

### 102. பிரயாணத்தில் செல்லுகையில் தக்பீர் மற்றும் தஸ்பீஹ் கூறுதல்

214- قَالَ جَابِرٌ τ: ((كُنَّا إِذَا صَعِدْنَا كَبَّرْنَا، وَإِذَا نَزَلْنَا سَبَّحْنَا))

(214) நாங்கள் (மேட்டுப்பகுதியில்) ஏறுகின்ற போது (அல்லாஹு அக்பர் எனத்) தக்பீர் கூறுவோராக, (பள்ளத்தில்) இறங்குகின்ற போது (ஸுப்ஹானல்லாஹ் எனக்கூறி) தஸ்பீஹ் செய்பவர்களாகவும் இருந்தோம் என ஜாபிர் ரளியல்லாஹு அன்ஹு கூறுகிறார்கள்.
நூல்: ஃபத்ஹுடன் புகாரீ 6 /135

### 103 - دُعاءُ المُسَافِرِ إِذا أَسْحَرَ

### 103. ஸஹரு நேரத்தில் பிரயாணியின் துஆ

215- ((سَمَّعَ سَامِعٌ بِحَمْدِ اللَّهِ، وَحُسْنِ بَلاَئِهِ عَلَيْنَا، رَبَّنَا صاحِبْنَا، وَأَفْضِلْ عَلَيْنَا، عَائِذاً بِاللَّهِ مِنَ النَّارِ))

(215) ஸமிஅ (அல்லது) ஸம்மஅ ஸாமிஉன் பிஹம்தில்லாஹி வ ஹுஸ்னி பலாயிஹி அலைனா, ரப்பனா ஸாஹிப்னா, வ அஃப்ளில் அலைனா, ஆயிதன் பில்லாஹி மினன்னாரி.

(ஸமிஅ என்பதன் படி இதன்) பொருள்: உயர்ந்தோனாகிய அல்லாஹ்வைப் பற்றிய எங்களுடைய போற்றுதல் மற்றும் அவன் எங்கள் மீது செய்துள்ள அருட்கொடைகளின் மீது சாட்சி இருப்பவன் சாட்சியாளனாக ஆகிவிட்டான். (ஸம்மஅ என்பதன்படி இதன்) பொருள்: எங்களுடைய இக்கூற்றைச் செவியேற்றவர் மற்றவருக்கு எத்தி வைத் து விட்டார், அதைப்போன்றே அவரும் கூறிவிட்டார். எங்களின் இரட்சகா! எங்களைப் பாதுகாப்பாயாக! உன் அருட்கொடைகளில் அநேகவற்றை எங்களுக்கு நல்கவும் செய்வாயாக! (விருப்பமற்ற அனைத்தையும் விட்டு திருப்பியும் வைத்து) நரகத்திலிருந்து அல்லாஹ்வைக் கொண்டு பாதுகாப்பு தேடியவராக (நான் இதைக் கூறுகிறேன்.)
நூல் : முஸ்லிம் 4/ 2086 இதன் பொருள்பற்றி ஷரஹ் நவவீ 7/39 காண்க!

### 104 - الدُّعَاءُ إِذَا نَزَلَ مَنْزِلاً فِي سَفَرٍ أَوْ غَيْرِهِ

### 104. பிரயாணத்தில் அல்லது அது அல்லாததில் எங்காவது ஓரிடத்தில் இறங்கினால் துஆ

216- ((أَعُوذُ بِكَلِمَاتِ اللَّهِ التَّامَّاتِ مِنْ شَرِّ مَا خَلَقَ))

(216) அஊது பிகலிமாதில்லாஹித் தாம்மாத்தி மின் ஷர்ரி மா கலக.

பொருள்: அல்லாஹ்வின் நிறைவான வாக்குகளைக் கொண்டு அவன் படைத்தவற்றின் தீமையிலிருந்து நான் காவல் தேடுகிறேன். நூல் : முஸ்லிம் 4 / 2080

### 105 - ذِكْرُ الرُّجُوعِ مِنَ السَّفَرِ

### 105. பிரயாணத்திலிருந்து திரும்புகையில்கூறப்படுவது

(217) ஒவ்வொரு உயர்வான இடத்திலும் மூன்று முறை தக்பீர் சொல்வார் பின்னர் அவர்,

217- ((يُكَبِّرُ عَلَى كُلِّ شَرَفٍ ثَلاَثَ تَكْبِيرَاتٍ ثُمَّ يَقُولُ: لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ، لَهُ الْمُلْكُ، وَلَهُ الْحَمْدُ، وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ، آيِبُونَ، تَائِبُونَ، عَابِدُونَ، لِرَبِّنَا حَامِدُونَ، صَدَقَ اللَّهُ وَعْدَهُ، وَنَصَرَ عَبْدَهُ، وَهَزَمَ الْأَحْزَابَ وَحْدَهُ))

லாயிலஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீக லஹு, லஹுல் முல்கு, வலஹுல் ஹம்து, வஹுவ அலா குல்லி ஷையின் கதீர் ஆயிபூன, தாயிபூன,ஆபிதூன, லிரப்பினா ஹாமிதூன ஸதகல்லாஹு வஃதஹு வநஸர அப்தஹு, வஹஜமல் அஹ்ஜாப வஹ்தஹு.

பொருள்: வணங்கப்படுபவன் அல்லாஹ்வையின்றி (வேறு) இல்லை. அவன் தனித்தவன் அவனுக்கு கூட்டுக்காரர் (எவரும்) இல்லை ஆட்சி அவனுக்கே உரியது புகழும் அவனுக்கே உரியது அவனே ஒவ்வொரு பொருளின் மீதும் மிக்க ஆற்றலுடையவன். (பயணத்திலிருந்து) திரும்பியவர்களாக, தவ்பாச் செய்தவர்களாக (அல்லாஹ்வை) வணங்கியவர்களாக, எங்களுடைய இரட்சகனைப் புகழ்ந்தவர்களாக (திரும்பி விட்டோம்) அல்லாஹ் தன் வாக்கை (நிறைவேற்றி) உண்மைப் படுத்தினான் தன்னுடைய அடியாருக்கு உதவியும் செய்து விட்டான், அவன் தனித்தவனாக எதிர்ப்படைகளைத் தோற்கடித்தும் விட்டான் யுத்தம் அல்லது ஹஜ்ஜிலிருந்து திரும்புகின்ற போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அதைக் கூறுபவர்களாக இருந்தார்கள். நூல்கள்: புகாரீ 7/ 163 முஸ்லிம் 2/ 980

### 106 - مَا يَقُولُ مَنْ أَتَاهُ أَمْرٌ يَسُرُّهُ أَوْ يَكْرَهُهُ

### 106. மகிழ்விக்கக் கூடியஅல்லது வெறுக்கக் கூடிய காரியம் வந்தடையுமானால் கூற வேண்டிய துஆ

(218) ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் - அவர்களுக்கு - அவர்களை மகிழ்விக்கக் கூடிய காரியம் வந்தடையும் பொழுது

218- ((كَانَ النَّبِيُّ صلى الله عليه وسلم إِذَا أَتَاهُ الْأَمْرُ يَسُرُّهُ قَالَ: ((الْحَمْدُ لِلَّهِ الَّذِي بِنِعْمَتِهِ تَتِمُّ الصَّالِحَاتُ))

அல்ஹம்து லில்லாஹில்லதீ பி நிஃமத்திஹி ததிம்முஸ் ஸாலிஹாத்து (1) என்று கூறுவார்கள்.

பொருள் : நல்லறங்கள் அவனின் அருட்கொடையினால் நிறைவு பெறுமே அத்தகைய அல்லாஹ்விற்கே புகழ் அனைத்தும் உரித்தாகுக!

வெறுக்கக் கூடிய காரியம் அவர்களுக்கு வந்தடையும் பொழுது

وَإِذَا أَتَاهُ الْأَمْرُ يَكْرَهُهُ قَالَ: ((الْحَمْدُ لِلَّهِ عَلَى كُلِّ حَالٍ))

அல்ஹம்து லில்லாஹி அலா குல்லிஹால் (2) என்று கூறுவார்கள்

பொருள் : ஒவ்வொரு நிலையிலும் புகழ் அனைத்தும் அல்லாஹ்விற்கே

1,2 நூல்கள் அமலுல் யவ்மி வல்லைலாவில் இப்னுஸ்ஸுன்னி மற்றும் ஹாகிம் 1/499ல் சரியானதெனக் கூறியுள்ளார்கள். ஸஹீஹுல் ஜாமிஉ 4/201 ல் அல்பானீ சரியானதெனவும் கூறியுள்ளார்கள்.

107 - فَضْلُ الصَّلاَةِ عَلَى النَّبِيِّ صلى الله عليه وسلم

## 107. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது ஸலவாத்துக் கூறுவதன் சிறப்பு

219-(1) قَالَ النَّبِيُّ صلى الله عليه وسلم : ((مَنْ صَلَّى عَلَيَّ صَلاَةً صَلَّى اللَّهُ عَلَيْهِ بِهَا عَشْراً))

(219) 1. எவர் என் மீது ஒரு முறை ஸலவாத்துக் கூறுகிறாரோ, அவரின் மீது அதற்காக அல்லாஹ் பத்து அருள் செய்கிறான் என ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள். நூல் : முஸ்லிம் 1 /288ல் பதிவு செய்துள்ளார்கள்.

220-(2) وَقَالَ صلى الله عليه وسلم : ((لاَ تَجْعَلُوا قَبْرِي عِيداً وَصَلُّوا عَلَيَّ؛ فَإِنَّ صَلاَتَكُم تَبْلُغُنِي حَيْثُ كُنْتُمْ))

(220) 2. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் என் அடக்கஸ்தலத்தை விழாக் கொண்டாடும் இடமாக ஆக்காதீர்கள் இன்னும் என் மீது ஸலவாத்துக் கூறுங்கள் ஏனெனில் உங்களுடைய ஸலவாத்து நீங்கள் எங்கிருப்பினும் எனக்கு எத்திவைக்கப்படுகிறது என்று கூறினார்கள்.
நூல்கள் :அபூதாவூது 2 / 218 அஹ்மது 2 / 367 ஆகியோர், அல்பானீ அவர்கள் ஸஹீஹ் அபீதாவூதில் 2 /383 இலக்கமிட்டு சரியானதெனவும் கூறியுள்ளார்கள்.

221-(3) وَقَالَ صلى الله عليه وسلم: ((الْبَخِيلُ مَنْ ذُكِرْتُ عِنْدَهُ فَلَمْ يُصَلِّ عَلَيَّ))

(221) 3. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், கருமித்தனத்தை உடையவர் யார் எனில், எவரிடம் நான் எடுத்துக் கூறப்பட்டு, அவர் என் மீது ஸலவாத்துச் சொல்லவில்லையோ அவராவார், என்று கூறினார்கள்.
நூல்கள்: திர்மிதீ 5 / 551 ஸஹீஹுல் ஜாமிஉ 3 /25, ஸஹீஹ் அத்திர்மிதீ 3/177 ம் காண்க!

222-(4) وَقَالَ صلى الله عليه وسلم: ((إِنَّ لِلَّهِ مَلاَئِكَةً سَيَّاحِينَ فِي الْأَرْضِ يُبَلِّغُونِي مِنْ أُمَّتِي السَّلاَمَ))

(222)4. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், நிச்சயமாக அல்லாஹ்விற்காக பூமியில் சுற்றித்திரியும் மலக்குகள் உள்ளார்கள். என் உம்மத்தினரிட மிருந்து எனக்கு ஸலாமை அவர்கள் எத்தி வைக்கிறார்கள் என்று கூறினார்கள்.
நூல்கள்: நஸாயீ மற்றும் ஹாகிம் 2/ 421, ஸஹீஹுந் நஸாயீயில் 1 /274ல் இதனை சரியான அறிவிப்புத் தொடர் எனவும் அல்பானீ கூறியுள்ளார்கள்.

223-(5) ((وَقَالَ صلى الله عليه وسلم: ((مَا مِنْ أَحَدٍ يُسَلِّمُ عَلَيَّ إِلاَّ رَدَّ اللَّهُ عَلَيَّ رُوحِي حَتَّى أَرُدَّ عَلَيْهِ السَّلاَمَ))

(223)5. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எந்த முஸ்லிமானவரும் என்மீது ஸலவாத்துக் கூறுவதில்லை. அவருக்கு நான் மறுபடி ஸலாம் கூறும் வரை என் மீது அல்லாஹ் என் உயிரை மீட்டியே தவிர என்று கூறினார்கள். 177ம் காண்க!

நூல்கள்: அபூதாவூது 2041 இலக்கமிட்டுப் பதிவு செய்துள்ளார்கள், அதனை அல்பானீ அவர்கள் ஸஹீஹ் அபீதாவூது 1/ 383ல் சரியானதெனக் கூறியுள்ளார்கள்.

## 108 – إِفْشَاءُ السَّلاَمِ

## 108. ஸலாமைப் பரப்புதல்

224-(1) قَالَ رَسُولُ اللَّهِ صلى الله عليه وسلم: ((لاَ تَدْخُلُوا الْجَنَّةَ حَتَّى تُؤْمِنُوا، وَلاَ تُؤْمِنُوا حَتَّى تَحَابُّوا، أَوَلاَ أَدُلُّكُم عَلَى شَيْءٍ إِذَا فَعَلْتُمُوهُ تَحَابَبْتُم، أَفْشُوا السَّلاَمَ بَيْنَكُمْ))

(224)1. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், நீங்கள் விசுவாசங் கொள்ளாத வரை சுவனத்தில் பிரவேசிக்கமாட்டீர்கள் இன்னும் நீங்கள் ஒருவரை ஒருவர் விரும்பாத வரை விசுவாசங் கொண்டோராக ஆக மாட்டீர்கள் ஒரு காரியத்தைப் பற்றி உங்களுக்கு நான் அறிவித்துத் தரட்டுமா? அதை நீங்கள் செய்தால் ஒருவரை ஒருவர் விரும்புவீர்கள், உங்களுக்கு மத்தியில் ஸலாமைப் பரப்புங்கள் என்று கூறினார்கள்.
நூல்: முஸ்லிம் மற்றும் அவரல்லாதோர் பதிவு செய்துள்ளார்கள்.

225-(2) ((ثَلاَثٌ مَنْ جَمَعَهُنَّ فَقَدْ جَمَعَ الْإِيمَانَ: الْإِنْصَافُ مِنْ نَفْسِكَ، وَبَذْلُ السَّلاَمِ لِلْعَالَمِ، وَالْإِنْفَاقُ مِنَ الإِقْتَارِ))

(225)2. (காரியங்களில்) மூன்று - அவற்றை எவர் ஒருமித்துஆக்கிக் கொண்டாரோ, ஈமானை ஒருமித்து ஆக்கிக் கொண்டவராவார். உன்னிடமிருந்துள்ள நீதி, அகிலத்தார்க்கு ஸலாமைப் பரப்புதல், நெருக்கடியின் போது (அல்லாஹ்வின் பாதையில்) செலவு செய்தல்.

நூல் : ஃபத்ஹுடன் புகாரீ 1/82 அம்மார் ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் வரை நிறுத்தப்பட்டதாக முஅல்லகாக உள்ள அறிவிப்பாகும்.

226- (3) وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا: أَنَّ رَجُلاً سَأَلَ النَّبِيَّ صلى الله عليه وسلم أيُّ الْإِسْلاَمِ خَيْرٌ قَالَ: ((تُطْعِمُ الطَّعَامَ، وَتَقْرأُ السَّلاَمَ عَلَى مَنْ عَرَفْتَ وَمَنْ لَمْ تَعْرِفْ))

(226)3. மிகச் சிறந்த இஸ்லாம் எது? என ஓர் ஆடவர் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் கேட்டார் அ(தற்க)வர்கள் உணவை (மற்றவருக்கு) நீர் உண்ணக் கொடுப்பது மற்றும் நீர் அறிந்த மற்றும் நீர் அறியாதவருக்கு ஸலாமை நீர் கூறுவதாகும் என்று கூறினார்கள்.
நூல்கள் : ஃபத்ஹுடன் புகாரீ 1 / 55, முஸ்லிம் 1 /65 அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் உமர் ரளியல்லாஹு அன்ஹுமா.

## 109 - كَيْفَ يَرُدُّ السَّلاَمَ عَلَى الْكَافِرِ إِذَا سَلَّمَ

## 109. காஃபிருக்கு - அவர் ஸலாம் கூறினால், பதில் கூறுவது எவ்வாறு?

227- ((إِذَا سَلَّمَ عَلَيْكُمْ أَهْلُ الْكِتَابِ فَقُولُوا: وَعَلَيْكُمْ))

(227) வேதக்காரர்கள் உங்களுக்கு ஸலாம் கூறினால் வ அலைக்கும் எனக் கூறுங்கள் (அல்ஹதீஸ்) நூல்கள் : ஸபத்ஹுடன் புகாரீ 11 /42, முஸ்லிம் 4 /1705.

## 110 - الدُّعاءُ عِنْدَ سَمَاعِ صِياحِ الدِّيكِ ونَهيقِ الْحِمَارِ

## 110. சேவல் கூவ மற்றும் கழுதை கத்த(க் கேட்டால்) துஆ

228- ((إِذَا سَمِعْتُمْ صِيَاحَ الدِّيَكَةِ فَاسْأَلُوا اللَّهَ مِنْ فَضْلِهِ؛ فَإِنَّهَا رَأَتْ مَلَكاً وَإِذَا سَمِعْتُمْ نَهِيقَ الْحِمَارِ فَتَعَوَّذُوا بِاللَّهِ مِنَ الشَّيطَانِ؛ فَإِنَّهُ رَأَى شَيْطَاناً))

(228) சேவல் கூவ நீங்கள் செவியேற்றால், அல்லாஹ் விடம் அவனின் பேரருளைக் கேளுங்கள், ஏனெனில் நிச்சயமாக அது, மலக்கைக் கண்டு விட்டது கழுதையின் சப்தத்தை நீங்கள் கேட்டாலோ, ஷைத்தானி(ன் தீமையி)லிருந்து அல்லாஹ்வைக் கொண்டு பாதுகாப்புத் தேடுங்கள் ஏனெனில் நிச்சயமாக அது, ஷைத்தானைக் கண்டு விட்டது.
நூல்கள்: ஸபத்ஹுடன் புகாரீ 6/ 350 முஸ்லிம் 4 / 2092

## 111 – الدُّعَاءُ عِنْدَ سَمَاعِ نُبَاحِ الْكِلاَبِ بِاللَّيْلِ

## 111. இரவில் நாய்கள் குரைக்க (க் கேட்டால் அதற்கென) துஆ

229- ((إِذَا سَمِعْتُمْ نُبَاحَ الْكِلاَبِ وَنَهِيقَ الْحَمِيرِ بِاللَّيْلِ فَتَعَوَّذُوا بِاللَّهِ مِنْهُنَّ؛ فَإِنَّهُنَّ يَرَيْنَ مَا لاَ تَرَوْنَ))

(229) நாய்களின் குரைக்கலை மற்றும் கழுதைகளின் சப்தங்களை இரவில் நீங்கள் செவியேற்றால், அவற்றிலிருந்து அல்லாஹ்வைக் கொண்டு காவல் தேடிக் கொள்ளுங்கள், ஏனெனில், நிச்சயமாக அவை நீங்கள் காணாதவற்றைக் கண்டன. (அல்ஹதீஸ்)
நூல்கள் : அபூதாவூது 4/ 327 , அஹ்மது 3/ 306 ஸஹீஹ் அபீதாவூதில் 3/961ல் அல்பானீ சரியானதெனவும் கூறியுள்ளார்கள்.

## 112 – الدُّعَاءُ لِمَنْ سَبَبْتَهُ

## 112. எவரை (குறைத்துக் கூறி) ஏசினீரோஅவருக்காக துஆ

230- قَالَ النَّبِيُّ صلى الله عليه وسلم: ((اللَّهُمَّ فَأَيُّمَا مُؤْمِنٍ سَبَبْتُهُ فَاجْعَلْ ذَلِكَ لَهُ قُرْبَةً إِلَيْكَ يَوْمَ الْقِيَامَةِ))

(230) யாஅல்லாஹ்! எந்த விசுவாசியையாவது நான் ஏசியிருப்பின், மறுமை நாளில் அதை உன்பக்கம் நெருக்கமாக ஆக்கி வைப்பாயாக!

நூல்கள் : ஃபத்ஹுடன் புகாரீ 11/171 முஸ்லிம் 4 / 2007 அவர்களுடைய வாக்கியத்தொடர், அதை அவருக்கு ஜகாத்தாக மற்றும் அருளாக ஆக்கி வைப்பாயாக!

## 113 – مَا يَقُولُ الْمُسْلِمُ إِذَا مَدَحَ الْمُسْلِمَ

## 113. ஒரு முஸ்லிம் மற்றோர் முஸ்லிமைப் போற்றும் பொழுது அவர் கூற வேண்டியது

231- قَالَ النَّبِيُّ صلى الله عليه وسلم : ((إِذَا كَانَ أَحَدُكُم مَادِحاً صَاحِبَهُ لاَ مَحَالَةَ فَلْيَقُلْ: أَحْسِبُ فُلاَناً وَاللَّهُ حَسِيبُهُ، وَلاَ أُزَكِّي عَلَى اللَّهِ أَحَداً، أَحْسِبُهُ - إِنْ كَانَ يَعْلَمُ ذَاكَ - كَذَا وَكَذَا))

(231) உங் களில் ஒருவர் தன்னுடனிருப்பவரை சந்தேகமின்றிப் போற்றுகின்ற போது, இன்னவரை (இன்னவாறு) நான் மதிப்பிடுகிறேன். (ஆனால்) அல்லாஹ்வோ, அவர்பற்றிக் கணக்கிடுபவன், அல்லாஹ்வை விட நான் எந்த ஒருவரையும் பரிசுத்தமானவர் எனக் கூறமாட்டேன் - அவர்பற்றித் தெரிந்திருப்பின் இன்ன இன்னவாறு அவரை நான் கணிக்கிறேன் என்றுக் கூறுவார்.
நூல்: முஸ்லிம் 4 /229 ல் இதனைப் பதிவு செய்துள்ளார்கள்.

114 - مَا يَقُولُ الْمُسْلِمُ إِذَا زُكِّيَ

## 114. (சான்று வழங்கப்பட்டு) போற்றப்பட்டு விட்டவர் கூற வேண்டியது

232- ((اللَّهُمَّ لاَ تُؤَاخِذْنِي بِمَا يَقُولُونَ، وَاغْفِرْ لِي مَا لاَ يَعْلَمُونَ، [وَاجْعَلْنِي خَيْراً مِمَّا يَظُنُّونَ]))

(232) அல்லாஹும்ம லா துஆகித்னீ பிமா யகூலூன் வஃக் ஃபிர்லீ மாலா யஃலமூன (வஜ்அல்னீ கைரன் மிம்மா எழுன்னூன).

பொருள் :அவர்கள் கூறுகின்றதைக் கொண்டு என்னை நீ பிடித்து விடாதே! அவர்கள் அறியாததை எனக்கு நீ பொருத்தருள்வாயாக! அவர்கள் எண்ணிக் கொண்டிருப்பதை விட என்னைச் சிறந்தவனாக நீ ஆக்குவாயாக!

நூல்கள் : அதபுல் முஃப்ரதில் புகாரீ 761 இலக்கமிட்டு ஸஹீஹுல் அதபில் முஃப்ரதில் 585 இலக்கமிட்டு இதன் அறிவிப்புத் தொடரை சரியானதெனவும் அல்பானீ கூறியுள்ளார்கள். அடைக்குறிக்குள் உள்ளது பைஹகீக்குரிய அதிகமாகும் ஷுஃஅபுல் ஈமானில் 4/ 228 இலக்கமிட்டு வேறு வழியில் பதிவு செய்துள்ளார்கள்.

115 - كَيفَ يُلَبِّي الْمُحْرِمُ فِي الْحَجِّ أَوِ الْعُمْرَة

## 115. ஹஜ் மற்றும் உம்ராவிற்காக இஹ்ராம் கட்டியவர் எவ்வாறு தல்பியாக் கூறுவார்?

233- ((لَبَّيْكَ اللَّهُمَّ لَبَّيْكَ، لَبَّيْكَ لاَ شَرِيكَ لَكَ لَبَّيْكَ، إِنَّ الْحَمْدَ، وَالنِّعْمَةَ، لَكَ وَالْمُلْكَ، لاَ شَرِيكَ لَكَ))

(233) லப்பைகல் லாஹும்ம லப்பைக, லப்பைக லா ஷரீக லக லப்பைக, இன்னல் ஹம்த வந்நிஃமத லக வல் முல்க லா ஷரீக லக.

பொருள்: இதோ உன் அழைப்பிற்கு பதில் கூற நான் ஆஜாராகி உள்ளேன்! யாஅல்லாஹ் இதோ உன் அழைப்பிற்கு பதில் கூற நான் ஆஜாராகி உள்ளேன்! இதோ உன் அழைப்பிற்கு பதில் கூற நான் ஆஜாராகி உள்ளேன்! உனக்குக் கூட்டுக்காரரர் (எவரும்) இல்லை, உன் அழைப்பிற்கு பதில் கூற நான் ஆஜாராகி உள்ளேன், நிச்சயமாக புகழ், அருட்கொடை, ஆட்சி யாவும் உனக்கே உரியது உனக்கு கூட்டுக்காரரர் (எவரும்) இல்லை.
(நூல்கள் : ஃபத்ஹுடன் புகாரீ 3 / 408 முஸ்லிம் 2/ 84.)

116 – التَّكْبِيرُ إِذَا أَتَى الْحَجَرَ الأَسْوَدَ

## 116. ஹஜருல் அஸ்வது மூலைக்கு வந்தடையும் பொழுது தக்பீர் கூறுதல்

234- ((طَافَ النَّبِيُّ صلى الله عليه وسلم بِالْبَيْتِ عَلَى بَعِيرٍ كُلَّمَا أَتَى الرُّكْنَ أَشَارَ إِلَيْهِ بِشَيْءٍ عِنْدَهُ وَكَبَّرَ))

(234) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஒட்டகத்தின் மீதிருந்தவாறு தவா:பு செய்தார்கள் ஹஜருல் அஸ்வத் இருக்கும் மூலைக்கு அவர்கள் வரும் போதெல்லாம் தங்களிடமிருந்து ஒரு பொருளால் சைக்கினை செய்து தக்பீரும் கூறினார்கள்.
நூல்: 3/476 :பத்ஹுடன் புகாரீ, இங்கே ஒரு பொருள் என்பதன் கருத்து, முன்பகுதி வளைந்துள்ள கைத்தடியாகும். 3 / 472 :பத்ஹுடன் புகாரீ காண்க!

117 – الدُّعَاءُ بَيْنَ الرُّكْنِ الْيَمَانِيِّ وَالْحَجَرِ الأَسْوَدِ

## 117. ருக்னுல் யமானி மற்றும் ஹஜருல் அஸ்வதுக்கிடையே (கூறப்படும்) துஆ

235- ((رَبَّنَا آتِنَا فِي الدُّنْيَا حَسَنَةً وَفِي الْآخِرَةِ حَسَنَةً وَقِنَا عَذَابَ النَّارِ))

(235) ரப்பனா ஆத்தினா :பித்துன்யா ஹஸனதன், வ :பில் ஆகிரத்தி ஹஸனதன் வகினா அதாபன்னார்.

பொருள் : எங்களின் இரட்சகா! இவ்வுலகத்தில் அழகானதை, மறுமையிலும் அழகானதை எங்களுக்கு நல்குவாயாக! நரக வேதனையிலிருந்தும் எங்களை நீ காப்பாயாக!

118 – دُعَاءُ الْوُقُوفِ عَلَى الصَّفَا وَالْمَرْوَةِ

## 118. ஸ:பா மற்றும் மர்வாவில் நிற்கின்ற போது துஆ

(236) ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஸ:பாவிற்கு நெருங்கிய போது,

236- ((لَمَّا دَنَا النَّبِيُّ صلى الله عليه وسلم مِنَ الصَّفَا قَرَأَ: (إِنَّ الصَّفَا وَالْمَرْوَةَ مِنْ شَعَائِرِ اللَّهِ) أَبْدَأُ بِمَا بَدَأَ اللَّهُ بِهِ)) فَبَدَأَ بِالصَّفَا فَرَقِيَ عَلَيْهِ حَتَّى رَأَى الْبَيْتَ،

"இன்னஸ் ஸ:பா வல் மர்வத்த மின் ஷஆயிரில்லாஹி' என்பதை ஓதினார்கள் அல்லாஹ் எதைக் கொண்டு ஆரம்பித்தள்ளானோ அதைக் கொண்டே நான் ஆரம்பம் செய்கிறேன் (என்று கூறிவிட்டு)

ஸஃபாவில் அவர்கள் ஆரம்பித்து (அல்லாஹ்வின்) வீட்டை காணுகின்ற அளவிற்கு அதன் மேல் அவர்கள் ஏறி, கிப்லாவை முன்னோக்கி, அல்லாஹ்வை ஏகத்துவப்படுத்தி, அவனைப் பெருமைப்படுத்தி(க் கூறும் தக்பீர்களைக் கூறி)னார்கள் இன்னும்,

فَاسْتَقْبَلَ الْقِبْلَةَ، فَوَحَّدَ اللَّهَ وَكَبَّرَهُ وَقَالَ: ((لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ، لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ، لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ، أَنْجَزَ وَعْدَهُ، وَنَصَرَ عَبْدَهُ، وَهَزَمَ الأَحْزَابَ وَحْدَهُ، ثُمَّ دَعَا بَيْنَ ذلكَ. قَالَ مِثْلَ هَذَا ثَلاَثَ مَرَّاتٍ)) الْحَدِيثُ. وَفِيهِ: ((فَفَعَلَ عَلَى الْمَرْوَةِ كَمَا فَعَلَ عَلَى الصَّفَا))

லாயிலஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீக லஹு, லஹுல் முல்கு, வலஹுல் ஹம்து, வஹுவ அலா குல்லி ஷையின் கதீர். லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு, அன்ஜஸ வஹ்தஹு வநஸர அப்தஹு, வஹஜமல் அஹ்ஜாப வஹ்தஹு என்று கூறினார்கள்.

பொருள்: வணங்கப்படுபவன் அல்லாஹ்வையின்றி (வேறு) இல்லை அவன் தனித்தவன், அவனக்கு கூட்டுக்காரன் (எவரும்) இல்லை ஆட்சி அவனுக்கே உரியது புகழும் அவனுக்கே உரியது, அவனே ஒவ்வொரு பொருளின் மீதும் மிக்க ஆற்றலுடையவன் வணங்கப்படுபவன் அல்லாஹ்வையின்றி (வேறு) இல்லை அவன் தனித்தவன் (அல்லாஹ்வாகிய) அவன் தன் வாக்கை நிறைவேற்றினான். தன்னுடைய அடியாருக்கு உதவியும் செய்தான் அவன் தனித்தவனாக எதிரிப்படைகளைத் தோற்கடிக்கவும் செய்தான். பின்னர், அதற்கிடையே அவர்கள் துஆச் செய்தார்கள். (ஸஃபாவில் கூறிய) இதைப்போன்றே மும்முறை கூறினார்கள். அ(ந்த ஹதீஸான)தில் உள்ளது ஸஃபாவின் மீது செய்ததைப் போன்றே மர்வாவின் மீது அவர்கள் செய்தார்கள். நூல்: முஸ்லிம் 2 /888

## 119 - الدُّعَاءُ يَوْمَ عَرَفَةَ

## 119. அரஃபா நாளன்று துஆ

(237) பிரார்த்தனையில் மிகச் சிறந்தது அரஃபா நாளின் பிரார்த்தனையாகும். நானும் எனக்கு முன் சென்ற நபிமார்களும் கூறியவற்றில் மிகச் சிறந்தது,

237- قَالَ النَّبِيُّ صلى الله عليه وسلم: ((خَيْرُ الدُّعَاءِ دُعَاءُ يَوْمِ عَرَفَةَ، وَخَيْرُ مَا قُلْتُ أَنَا وَالنَّبِيُّونَ مِنْ قَبْلِي: لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ، لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ))

லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீக லஹு, லஹுல் முல்கு, வலஹுல் ஹம்து, வஹுவ அலா குல்லி ஷையின் கதீர் என்பதாகும்.

பொருள் : வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத்தவிர வேறு யாரும் இல்லை. அவன் தனித்தவன், அவனுக்கு கூட்டுக்காரர் இல்லை.அவனே சகலவற்றின் மீதும் பேராற்றல் உடையவன்.

நூல்கள் :திர்மிதீ, ஸஹீஹ் அத்திர்மிதீ 3/184 மற்றும் 4/6 அஹாதீஸ் அஸ்ஸஹீஹாவில் அல்பானீ அழகான அறிவிப்புத் தொடர் எனக் கூறியுள்ளார்கள்.

### 120 - الذِّكْرُ عِنْدَ المَشْعَرِ الْحَرَامِ

### 120. (முஸ்தலிஃபா) எனும் மஷ்அருல் ஹராமிடத்துக் கூறப்படும் துஆ

238- ((رَكِبَ النَّبِيُّ صلى الله عليه وسلم الْقَصْوَاءَ حَتَّى أَتَى الْمَشْعَرَ الْحَرَامَ فَاسْتَقْبَلَ الْقِبْلَةَ (فَدَعَاهُ، وَكَبَّرَهُ، وَهَلَّلَهُ، وَوَحَّدَهُ) فَلَمْ يَزَلْ وَاقِفاً حَتَّى أَسْفَرَ جِدّاً فَدَفَعَ قَبْلَ أَنْ تَطْلُعَ الشَّمسُ))

(238) ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அல்கஸ்வாஉ (எனும் தங்களுடைய ஒட்டகையின்) மீது வாகனித்து முடிவாக, மஷ்அருல் ஹராமை வந்தடைந்தனர். பின்னர் கிப்லாவை அவர்கள் முன்னோக்கி, (அல்லாஹ்வாகிய) அவனிடம் பிரார்த்தனைச் செய்தார்கள் (அவனை உயர்த்தி) தக்பீரும் கூறி(லாயிலாஹ இல்லல்லாஹு என்று) அவனுடைய வணக்கத்திற்குரிய தகுதியைப் பற்றியும் கூறி, அவனுடைய ஏகத்துவத்தையும் பற்றிக் கூறினார்கள். (இவ்வாறாக) நன்றாக வெளிச்சம் ஏற்படும் வரை (அங்கு) நின்றவர்களாக இருந்தார்கள் (ஆனால்) சூரிய உதயத்திற்கு முன்பு அவர்கள் புறப்பட்டு விட்டார்கள்.
நூல் : முஸ்லிம் 2 / 891

### 121 - التَّكْبِيرُ عِنْدَ رَمْيِ الْجِمَارِ مَعَ كُلِّ حَصَاةٍ

### 121. கற்களை எறியுமிடத்து ஒவ்வொரு பொடிக்கல்லுடனும் தக்பீர் கூறுதல்

239- ((يُكَبِّرُ كُلَّمَا رَمَى بِحَصَاةٍ عِنْدَ الْجِمَارِ الثَّلاَثِ، ثُمَّ يَتَقَدَّمُ، ويَقِفُ يَدْعُو مُسْتَقْبِلَ الْقِبلَةِ، رَافِعاً يَدَيْهِ بَعْدَ الْجَمْرَةِ الْأُولَى وَالثَّانِيَةِ. أَمَّا جَمْرَةُ الْعَقَبَةِ فَيَرْمِيهَا وَيُكَبِّرُ عِنْدَ كُلِّ حَصَاةٍ وَيَنْصَرِفُ وَلاَ يَقِفُ عِنْدَهَا))

(239) மூன்று கல்லெறியுமிடத்து ஒவ்வொரு பொடிக் கல்லையும் எறியும் போதெல்லாம், அல்லாஹு அக்பர் என்று தக்பீர் கூறுவார், பின்னர் கொஞ்சம் முன் சென்று, கிப்லாவை முன்னோக்கியவராக, அவருடைய இரு கைகளை உயர்த்தியவராக முதல் மற்றும் இரண்டாவது கல்லெறியுமிடத்து துஆச் செய்வார் ஆனாலும் இறுதியாக கல்லெறியுமிடத்து அதற்கு கல்லெறிவார். ஒவ்வொரு பொடிக்கல்லை எறியுமிடத்த தக்பீரும் கூறுவார் (அவ்வாறு செய்த பின் நகர்ந்து நின்று பிரார்த்திப்பதற்காக) அவர் அங்கு நில்லாது திரும்பியும் விடுவார்.
நூல்கள் : 3 / 581 583, 584 ஃபத்ஹுடன் புகாரீ மற்றும் முஸ்லிம்.

122 – دُعَاءُ التَّعَجُّبِ وَالأَمْرِ السَّارِّ

## 122. ஆச்சர்யம் மற்றும் மகிழ்வு தரும் காரியத்திற்காக துஆ

240-(1) ((سُبْحَانَ اللَّهِ!))

(240) 1. ஸுப்ஹானல்லாஹ்.

241-(2) ((اللَّهُ أَكْبَرُ!))

(241) 2. அல்லாஹு அக்பர்.

123 – مَا يَفْعَلُ مَنْ أَتَاهُ أَمْرٌ يَسُرُّهُ

## 123. மகிழ்விக்கக் கூடிய செய்தி வந்தால் அவர் செய்ய வேண்டியது

242- ((كَانَ النَّبِيُّ صلى الله عليه وسلم إِذَا أَتَاهُ أَمْرٌ يَسُرُّهُ أَوْ يُسَرُّ بِهِ خَرَّ سَاجِداً شُكْراً لِلَّهِ تَبَارَكَ وَتَعَالَى))

(242) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் - அவர்களுக்கு மகிழ்வு தரக்கூடிய அல்லது அதனால் மகிழ்ச்சியடையப்படும் செய்தி வந்தடையும் பொழுது பரகத்துகளை நல்குபவன் மற்றும் உயர்ந்தோனாகிய அல்லாஹ்விற்கு நன்றி செலுத்தும் நிமித்தம் ஸஜ்தா செய்பவர்களாக ஆகிவிடுவார்கள்.
நூல்கள் :திர்மிதீ, இப்னுமாஜா, அபூதாவூது ஆகியோர் மற்றும் ஸஹீஹ் இப்னுமாஜா 1 /233, இர்வாஉல் கலீல் 2/ 226 காண்க!

124 – مَا يَفْعَلُ وَيَقُولُ مَنْ أَحَسَّ وَجَعاً فِي جَسَدِهِ

## 124. தன் உடலில் வேதனையை உணர்ந்தவர் கூற வேண்டியது

243- ((ضَعْ يَدَكَ عَلَى الَّذِي تَأَلَّمَ مِنْ جَسَدِكَ وَقُلْ: بِسْمِ اللَّهِ،)) ثَلاَثاً،

(243) உம்முடைய உடலில் வேதனை ஏற்பட்ட (இடமான)தன் மீது உமது கையை வைத்துக் கொண்டு, பிஸ்மில்லாஹி என்று மும்முறை கூறுவீராக! மேலும்,

وَقُلْ سَبْعَ مَرَّاتٍ: ((أَعُوذُ بِاللَّهِ وَقُدْرَتِهِ مِنْ شَرِّ مَا أَجِدُ وَأُحَاذِرُ))

"அஊது பில்லாஹி வகுத்ரத்திஹி மின் ஷர்ரி மா அஜிது வ உஹாதிரு' என்று ஏழு முறை கூறுவீராக!
பொருள்: அல்லாஹ் மற்றும் அவனுடைய ஆற்றலைக் கொண்டு நான் பெற்றிருக்கின்ற மேலும் நான் பயந்து கொண்டிருக்கின்ற தீமையிலிருந்து காவல் தேடுகிறேன்.
நூல் : முஸ்லிம் 4 / 1728

125 - دُعاءُ مَنْ خَشِيَ أَنْ يُصِيبَ شَيْئاً بِعَيْنِه

### 125. கண் பட்டுவிடுமென பயந்தவருக்கு துஆ

244- ((إِذَا رَأَى أَحَدُكُم مِنْ أَخِيهِ، أَوْ مِنْ نَفْسِهِ، أَوْ مِنْ مَالِهِ مَا يُعْجِبُهُ [فَلْيَدْعُ لَهُ بِالْبَرَكَةِ] فَإِنَّ الْعَيْنَ حَقٌّ))

(244) உங்களில் ஒருவர் தன் சகோதரனிடம் அல்லது தன்னிடமிருந்து அல்லது தன் செல்வத்திலிருந்து தனக்கு வியப்பூட்டக் கூடியதைக் கண்டால், (அவருக்காக பரகத்துக்கு துஆ செய்யவும், ஏனெனில், நிச்சயமாக கண் (பார்வை என்பது) உண்மையானதாகும். அல்ஹதீஸ்

நூல்கள் : முஸ்னத் அஹ்மது 4/447 இப்னுமாஜா மாலிக் ஆகியோர் ஸஹீஹ் அல்ஜாமிஉ 1/212ல் அல்பானீ இதனைச் சரியான தரத்தை உடையதெனக் கூறியுள்ளார்கள். மற்றும் அர்னாவூத்துக்குரிய ஜாதுல் மஆதின் பரிசீலனை 4/ 170 காண்க!

126 - مَا يُقَالُ عِنْدَ الْفَزَعِ

### 126. திடுக்கத்தின் போது கூறப்படும் துஆ

245- ((لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ!))

(245) லாயிலாஹ இல்லல்லாஹு

பொருள் : வணங்கப்படுபவன் அல்லாஹ்வை யின்றி (வேறு) இல்லை.
நூல்கள் : ஃபத்ஹுடன் புகாரீ 6 / 181 முஸ்லிம் 4/ 2208 காண்க!

127 - مَا يَقُولُ عِنْدَ الذَّبْحِ أَوِ النَّحْرِ

### 127. கால்நடைகள் அல்லது ஒட்டகத்தை அறுப்பவர் கூற வேண்டியது துஆ

246- ((بِسْمِ اللَّهِ وَاللَّهُ أَكْبَرُ [اللَّهُمَّ مِنْكَ وَلَكَ] اللَّهُمَّ تَقَبَّلْ مِنِّي))

(246) பிஸ்மில்லாஹி வல்லாஹு அக்பர் (அல்லாஹும்ம மின்க, வலக)அல்லாஹும்ம தகப்பல் மின்னீ.
பொருள்: அல்லாஹ்வின் பெயரால், அல்லாஹ்வோ மிகப்பெரியவன் (யா அல்லாஹ்! (இது) உன்னிடமிருந்து, உனக்கே உரியதாகும்) யாஅல்லாஹ்! என்னிடமிருந்து நீ ஏற்றுக் கொள்வாயாக!
நூல்கள் : முஸ்லிம் 3 /1557 பைஹகீ மற்றும் 9 / 287. இரு அடைகுறிக்கி டையே உள்ளது பைஹகீ மற்றும் அவரல்லாதவருக்குரியதாகும். கடைசி வாக்கியம் அதன் கருத்தை முஸ்லிமின் அறிவிப்பிலிருந்து நான் இங்கு தந்துள்ளேன்.

128 - مَا يَقُولُ لِرَدِّ كَيْدِ مَرَدَةِ الشَّيَاطِينِ

## 128. கட்டுங்கடங்காத ஷைத்தான்களின் (தீமை) சூழ்ச்சியிலிருந்து விடுபட ஓதும் துஆ

247- ((أَعُوذُ بِكَلِمَاتِ اللَّهِ التَّامَّاتِ الَّتِي لاَ يُجَاوِزُهُنَّ بَرٌّ وَلاَ فَاجِرٌ: مِنْ شَرِّ مَا خَلَقَ، وَبَرَأَ وَذَرَأَ، وَمِنْ شَرِّ مَا يَنْزِلُ مِنَ السَّمَاءِ، وَمِنْ شَرِّ مَا يَعْرُجُ فِيهَا، وَمِنْ شَرِّ مَا ذَرَأَ فِي الْأَرْضِ، وَمِنْ شَرِّ مَا يَخْرُجُ مِنْهَا، وَمِنْ شَرِّ فِتَنِ اللَّيْلِ وَالنَّهَارِ، وَمِنْ شَرِّ كُلِّ طَارِقٍ إِلاَّ طَارِقاً يَطْرُقُ بِخَيْرٍ يَا رَحْمَنُ))

(247) அஊது பி கலிமாத்தில்லாஹித் தாம்மாத்தில்லத்தீ லா யுஜாவிஸூ ஹுன்ன பர்ருன், வலா ஃபாஜிருன் மின் ஷர்ரி மாகலக, வபரஅ, வ தரஅ, வமின் ஷர்ரி மா யன்ஜிலு மினஸ் ஸமாயி, வமின் ஷர்ரி மா யஃருஜு ஃபீஹா, வமின் ஷர்ரி மா தரஅ ஃபில் அர்ளி, வமின் ஷர்ரி மா யக்ருஜு மின்ஹா, வமின் ஷர்ரி ஃபிதனில் லைலி, வந்நஹாரி, வமின் ஷர்ரி குல்லி தாரிகின் இல்லா தாரிகன் யத்ருகு பிகைரின் யா ரஹ்மானு.

பொருள் : அவன் படைத்த, அவனே வெளிப்படுத்திய, அவனே பரப்பியவற்றின் தீமையிலிருந்து மற்றும் வானத்திலிருந்து இறங்குகின்றவற்றின் தீமையிலிருந்தும், அதிலே உயர்ந்து செல்கின்றவற்றின் தீமையிலிருந்தும், பூமியில் அவன் பரப்பி வைத்திருக்கின்றவற்றின் தீமையிலிருந்தும், அதிலிருந்து வெளியேறுகின்றவற்றின் தீமையிலிருந்தும் ஒவ்வொரு இரவிலும் தட்டக்கூடியவருடைய (அவரின் மூலம் வந்து சேரக்கூடிய) ஒவ்வொரு தீமையிலிருந்தும் நல்லவரோ, பொல்லாதவரோ அவற்றைக் கடந்து விட முடியாதே அத்தகைய அல்லாஹ்வின் நிறைவான வாக்கியங்களைக் கொண்டு நான் காவல் தேடுகிறேன் நன்மையைக் கொண்டு (வந்து சேர்க்கத்) தட்டுபவர் நீங்கலாக யாரஹ்மானே!

நூல்கள் : அஹ்மது 3 /419 சரியான அறிவிப்புத் தொடருடன் மற்றும் இப்னுஸ் ஸுன்னீ 634 இலக்கமிட்டு, சரியான அறிவிப்புத் தொடர் என அதனைப் பற்றி தஹாவியாவின் ஹதீஸ்களின் பரிசீலனையில் அர்னாவூத் கூறியுள்ளார். மஜ்மஉஜ் ஜவாயிது 10 /127ம் காண்க!

129 - الاسْتِغْفَارُ والتَّـوبَةُ

## 129. பாவம் பொருத்தருளத் தேடுதல் மற்றும் பாவமீட்சி பெறும் துஆ

248-(1) قَالَ رَسُولُ اللَّهِ صلى الله عليه وسلم: ((وَاللَّهِ إِنِّي لأَسْتَغْفِرُ اللَّهَ وَأَتُوبُ إِلَيْهِ فِي الْيَوْمِ أَكْثَرَ مِنْ سَبْعِينَ مَرَّةً)).

(148) 1. அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நிச்சயமாக நான், ஒரு நாளில் எழுபது முறையை விட அதிகமாக அல்லாஹ் விடம் பாவம் பொருத்தருளத் தேடி, அவனின் பாலே பாவமீட்சி பெறுகிறேன் என அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். நூல் :ஃபத்ஹுடன் புகாரீ 11 /101

249-(2) وَقَالَ صلى الله عليه وسلم: ((يَا أَيُّهَا النَّاسُ تُوبُوا إِلَى اللَّهِ فَإِنِّي أَتُوبُ فِي الْيَوْمِ إِلَيْهِ مِائَةَ مَرَّةٍ)).

(249)2. மேலும் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், மனிதர்களே! அல்லாஹ்வின்பால் தவ்பாச் செய்யுங்கள் ஏனெனில் நிச்சயமாக நான் ஒரு நாளையில் நூறு முறை அவனின்பால் தவ்பாச் செய்கிறேன் என்று கூறினார்கள்.
நூல் : முஸ்லிம் 4 /2076.

(250)3. மேலும் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எவர்,

250-(3) وَقَالَ صلى الله عليه وسلم: ((مَنْ قَالَ أَسْتَغْفِرُ اللَّهَ الْعَظِيمَ الَّذِي لاَ إِلَهَ إِلاَّ هُوَ الْحَيُّ الْقَيُّومُ وَأَتُوبُ إِلَيهِ، غَفَرَ اللَّهُ لَهُ وَإِنْ كَانَ فَرَّ مِنَ الزَّحْفِ)).

"அஸ்தஃக் ஃபிருல்லாஹல் அழீமல்லதீ லாயிலாஹ இல்லாஹுவல் ஹய்யுல் கய்யூமு வ அதூபு இலைஹி' என்று கூறுகிறாரோ, அவர் போர்க்களத்திலிருந்து வெருண்டு ஓடியிருப்பினும் அவருக்காக அல்லாஹ் பாவம் பொருத்தருளுகிறான் என்று கூறினார்கள்.

பொருள் : மகத்தான அல்லாஹ்விடம் நான் பாவம் பொருத்தருளத் தேடுகிறேன் அவன் எத்தகையவனெனில், வணங்கப்படுபவன் அவனையன்றி (வேறு) இல்லை ஜீவனுள்ளவன், (மற்றவர்களை நிலை நிறுத்தச் செய்வதோடு) தான் நிலையானவன் அவன்பாலே தவ்பாச் செய்கிறேன்.
நூல்கள் : அபூதாவுது 2 /85 திர்மிதீ 5 /569 ஹாகிம் ஆகியோர், அவர் அதை சரியானதெனக் கூறி, அதற்கு தஹபீ 1 / 511ல் ஒப்புதலும் தெரிவித்து, அல்பானீயும் சரியானதெனக் கூறியுள்ளார்கள். ஸஹீஹ் அத்திர்மிதீ 3 / 182, மற்றும் அர்னாவூத் பரிசீலித்த ஜாமிஉல் உஸூல் லி அஹாத்திர் ரஸூல் 4/ 389, 390 ம் காண்க!

251-(4) وَقَالَ صلى الله عليه وسلم : ((أَقْرَبُ مَا يَكُونُ الرَّبُّ مِنَ الْعَبْدِ فِي جَوْفِ اللَّيْلِ الآخِرِ فَإِنِ اسْتَطَعْتَ أَنْ تَكُونَ مِمَّنْ يَذْكُرُ اللَّهَ فِي تِلْكَ السَّاعَةِ فَكُنْ)).

(251)4. அடியானிடமிருந்து இரட்சகனாகிய ரப்பு மிக்க நெருக்கமாக இருப்பது இரவின் கடைசிப் பகுதியிலாகும். ஆகவே, அந்த நேரத்தில் அல்லாஹ்வை நினைவு கூருபவர்களில் இருக்க நீர் சக்தி பெற்றால் (அவ்வாறே) இருப்பீராக! என்று ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.
நூல் : திர்மிதீ, நஸாயீ 1/ 279 ல் ஹாகிம் ஆகியோர் இதனைப் பதிவு செய்துள்ளார்கள். இன்னும் ஸஹீஹ் அத்திர்மிதீ 3 /183, ஜாமிஉல் உஸூல் அர்னாவூதின் பரிசீலனை 4 /144ம் காண்க!

252-(5) وَقَالَ صلى الله عليه وسلم : ((أَقْرَبُ مَا يَكُونُ الْعَبْدُ مِنْ رَبِّهِ وَهُوَ سَاجِدٌ فَأَكْثِرُوا الدُّعَاءَ)).

(252)5. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தன் இரட்சகனிடம் அடியான் மிக்க நெருக்கமாக இருப்பது அவன் ஸுஜுது செய்தவனாக இருக்கும் நிலையிலாகும். ஆகவே, பிரார்த்தனையை (ஸஜ்தாவில்) அதிகமாக்குங்கள் என்று கூறினார்கள்.
நூல் : முஸ்லிம் 1 /350

253-(6) وَقَالَ صلى الله عليه وسلم: ((إِنَّهُ لَيُغَانُ عَلَى قَلْبِي وَإِنِّي لأَسْتَغْفِرُ اللَّهَ فِي الْيَوْمِ مِائَةَ مَرَّةٍ))

(253) 6. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நிச்சயமாகக் காரியம், என் இதயத்தின் மீது மூடப்பட்டு மறைக்கப்படுகிறது (எப்போதும் அல்லாஹ்வை நினைவுகூரும் எனக்கு, சிலசமயம் நினைவு கூறாது சிறுமறதி ஏற்படுகிறது ஆகவே அதைக் கூட என் விஷயத்தில் குற்றமாகக் கருதி அதற்கென) நிச்சயமாக நானோ ஒரு நாளில் நூறு முறை அல்லாஹ்விடம் பாவமன்னிப்புத் தேடுகிறேன் என்று கூறினார்கள்.
நூல் : முஸ்லிம் 4 /2075, அடைகுறிக்குள் இருப்பது பற்றி ஜாமிஉல் உஸூல் 4 /368ல் காண்க!

130 – فَضْلُ التَّسْبِيحِ وَالتَّحْمِيدِ، وَالتَّهْلِيلِ، وَالتَّكْبِيرِ

## 130. தஸ்பீஹ் (ஸுப்ஹானல்லாஹ் ) தஹ்மீது (அல்ஹம்து லில்லாஹி ) தஹ்லீல் (லாயிலாஹ இல்லல்லாஹு) தக்பீர் (அல்லாஹு அக்பர்) ஆகியவற்றின் சிறப்பு

254-(1) ((قَالَ صلى الله عليه وسلم مَنْ قَالَ: سُبْحَانَ اللَّهِ وَبِحَمْدِهِ فِي يَوْمٍ مِائَةَ مَرَّةٍ حُطَّتْ خَطَايَاهُ وَلَوْ كَانَتْ مِثْلَ زَبَدِ الْبَحْرِ))

(254) 1. ஒரு நாளில் நூறு முறை "ஸுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி' என்று எவர் கூறுகிறாரோ அவரின் பாவங்கள் கடல் நுரை போன்றிருப்பினும் சரியே அழிக்கப்பட்டு விடும் என்று ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.
நூல்கள்: புகாரீ 7 / 168 முஸ்லிம் 4 / 2071, இன்னும் காலைப்பொழுதை அடையும்பொழுது மற்றும்மாலைப் பொழுதை அடையும் பொழுது எவர் அதை நூறு முறைக் கூறினாரோ, அதன் சிறப்புப் பற்றி இதே நூலில் பக்கம்....... காண்க!

(255) 2. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எவர்,

255-(2) وَقَالَ صلى الله عليه وسلم: ((مَنْ قَالَ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ، لَهُ الْمُلْكُ، وَلَهُ الْحَمْدُ، وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ)) عَشْرَ مِرَارٍ، كَانَ كَمَنْ أَعْتَقَ أَرْبَعَةَ أَنْفُسٍ مِنْ وَلَدِ إِسْمَاعِيلَ

"லாயிலஹ இல்லல்லாஹு வஹ் தஹு லா ஷரீக லஹு லஹுல் முல்கு, வலஹுல் ஹம்து, வஹுவ அலா குல்லி ஷையின் கதீர்' என்று பத்து முறைக் கூறினாரோ அவர்இஸ்மாயீலின் பிள்ளைகளிலிருந்து நான்கு நபர்களை உரிமை விட்டவரைப் போன்றாவார் என்று கூறினார்கள்

நூல்கள் :புகாரீ 7 / 67 முஸ்லிம் அதே வாக்கியத்துடன் 4 / 2071ல் பதிவு செய்துள்ளார்கள் அதை ஒரு நாளைக்கு நூறு முறை கூறுபவருக்குரிய சிறப்புப் பற்றி இதே நூலில் பக்கம்..... ல் காண்க!

256-(3) وَقَالَ صلى الله عليه وسلم: كَلِمَتَانِ خَفِيفَتَانِ عَلَى اللِّسَانِ، ثَقِيلَتَانِ فِي الْمِيزَانِ، حَبِيبَتَانِ إِلَى الرَّحْمَنِ

(256) 3. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், இரு வார்த்தைகள் நாவின் மீது இலேசானவை தராசில் அவையிரண்டும் கனமானவை ரஹ்மானுக்கு அவையிரண்டும் விருப்பமானவை,

((سُبْحَانَ اللَّهِ وَبِحَمْدِهِ، سُبْحانَ اللَّهِ الْعَظِيمِ))

ஸுப்ஹானல்லாஹி வபி ஹம்திஹி, ஸுப்ஹானல் லாஹில் அழீம் என்று கூறினார்கள்.

நூல்கள் : புகாரீ 7 / 168 முஸ்லிம் 4 /2072

(257) 4. மேலும் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்,

257-(4) وَقَالَ صلى الله عليه وسلم: ((لأَنْ أَقُولَ سُبْحَانَ اللَّهِ، وَالْحَمْدُ لِلَّهِ، وَلاَ إِلَهَ إِلاَّ اللَّهُ، وَاللَّهُ أَكْبَرُ، أَحَبُّ إِلَيَّ مِمَّا طَلَعَتْ عَلَيْهِ الشَّمسُ))

"ஸுப்ஹானல்லாஹி வல்ஹம்து லில்லாஹி, வலா இலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர், என நான் கூறுவது சூரியன் எதன் மீது உதயமானதோ அதை விட எனக்கு மிக விருப்பமானதாகும் என்று கூறினார்கள்.
நூல்: முஸ்லிம் 4 / 2072.

258-(5) وَقَالَ صلى الله عليه وسلم: ((أَيَعْجِزُ أَحَدُكُم أَنْ يَكْسِبَ كُلَّ يَوْمٍ أَلْفَ حَسَنَةٍ)) فَسَأَلَهُ سَائِلٌ مِنْ جُلَسَائِهِ كَيْفَ يَكْسِبُ أَحَدُنَا أَلْفَ حَسَنَةٍ؟ قَالَ: ((يُسَبِّحُ مِائَةَ تَسْبِيحةٍ، فَيُكْتَبُ لَهُ أَلْفُ حَسَنَةٍ أَوْ يُحَطُّ عَنْهُ أَلْفُ خَطِيئَةٍ))

(258)5. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், உங்களில் ஒருவர் ஒவ்வொரு நாளைக்கும் ஆயிரம் நன்மைகளை சம்பாதிக்க இயலுமா? என்று கேட்டார்கள், அமர்ந்திருந்தவர்களில் ஒருவர் எங்களிலொரு வர் ஆயிரம் நன்மைகளை எவ்வாறு சம்பாதிப்பார் ? என்று கேட்டார், அ(தற்க)வர்கள், நூறு தஸ்பீஹ்களை அவர் செய்வார். அதனால் ஆயிரம் நன்மைகள் அவருக்காக எழுதப்படும் அல்லது ஆயிரம் தவறுகளை அவரை விட்டும் அழிக்கப்படும் என்று கூறினார்கள்.
நூல்: முஸ்லிம் 4 / 2073

259-(6) ((مَنْ قَالَ: سُبْحَانَ اللَّهِ الْعَظِيمِ وَبِحَمْدِهِ غُرِسَتْ لَهُ نَخْلَةٌ فِي الْجَنَّةِ))

(259) 6. "ஸுப்ஹானல்லாஹில் அழீமி வபிஹம்திஹி' என எவர் கூறுகிறாரோ அவருக்காக சுவனத்தில் பேரீச்சமரம் நட்டப்படுகிறது . அல்ஹதீஸ்

நூல்கள் : இதனைத் திர்மிதீ 5 / 511 ல் ஹாகிம் 1 / 501 இலக்கமிட்டு பதிவு செய்து அதை சரியானதெனவும் கூறியுள்ளார்கள். அதற்கு தஹபீயும் ஒப்புதல் தெரிவித்துள்ளார்கள் 5/ 231 ஸஹீஹுல் ஜாமிஉ, 3 / 160 ஸஹீஹு அத்திர்மிதீ காண்க!

(260) 7. மேலும் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அப்துல்லாஹ் பின் கைஃஸ! சுவனத்தினுடைய பொக்கிஷங்களிலிருந்து ஒரு பொக்கிஷத்தைப்பற்றி உமக்கு நான் அறிவித்துத் தரவேண்டாமா? என்று கேட்டார்கள் அல்லாஹ்வின் தூதர் அவர்களே! ஆம் ! என்று நான் கூறினேன் அ(தற்க)வர்கள்,

260-(7) وَقَالَ صلى الله عليه وسلم: ((يَا عَبْدَ اللَّهِ بْنَ قَيْسٍ أَلاَ أَدُلُّكَ عَلَى كَنْزٍ مِنْ كُنُوزِ الْجَنَّةِ))؟ فَقُلْتُ: بَلَى يَا رَسُولَ اللَّهِ، قَالَ: ((قُلْ لاَ حَوْلَ وَلاَ قُوَّةَ إِلاَّ بِاللَّهِ))

லாஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹி என்று கூறுவீராக! என்று கூறினார்கள்.
நூல் :ஃபத்ஹுடன் புகாரீ 11 / 213 முஸ்லிம் 4 / 2076
(261) 8. மேலும் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அல்லாஹ்வுக்கு மிக விருப்பமான வார்த்தைகள் நான்காகும்:

261-(8) وَقَالَ صلى الله عليه وسلم: ((أَحَبُّ الْكَلاَمِ إِلَى اللَّهِ أَرْبَعٌ: سُبْحَانَ اللَّهِ، وَالْحَمْدُ لِلَّهِ، وَلاَ إِلَهَ إِلاَّ اللَّهُ، وَاللَّهُ أَكْبَرُ، لاَ يَضُرُّكَ بِأَيِّهِنَّ بَدَأْتَ))

ஸுப்ஹானல்லாஹி, வல்ஹம்துலில்லாஹி, வலா இலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர் அவற்றில் எதைக் கொண்டு நீர் ஆரம்பித்தாலும் உமக்கு இடர் செய்யாது என்று கூறினார்கள். நூல் : முஸ்லிம் 3 / 1685

(262)9. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் கிராமத்துவாசி ஒருவர் வந்து, ஒரு சில வாக்கியங்களை எனக்கு நீங்கள் கற்றுக் கொடுங்கள்
அவற்றை நான் கூறிக்கொள்வேன் என்று கூறினார் அ(தற்க)வர்கள்,

262-(9) جَاءَ أَعْرَابِيٌّ إِلَى رَسُولِ اللَّهِ صلى الله عليه وسلم فَقَالَ: عَلِّمْنِي كَلاماً أَقُولُهُ: قَالَ: ((قُلْ: لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ، اللَّهُ أَكْبَرُ كَبِيراً، وَالْحَمْدُ لِلَّهِ كَثِيراً، سُبْحَانَ اللَّهِ رَبِّ العَالَمِينَ، لاَ حَوْلَ وَلاَ قُوَّةَ إِلاَّ بِاللَّهِ الْعَزِيزِ الْحَكِيمِ)) قَالَ: فَهَؤُلاَءِ لِرَبِّي، فَمَا لِي؟ قَالَ:

லாயிலஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீக லஹு அல்லாஹு அக்பர் கபீரா, வல்ஹம்து லில்லாஹி கஸீரா, ஸுப்ஹானல்லாஹி ரப்பில் ஆலமீன் லாஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹில் அஜீஜில் ஹகீமி என்று கூறுவீராக ! என்று கூறினார்கள் அ(தற்க)வர் இவை என் இரட்சகனுக்குரியவை (ஆனால்) எனக்கு(ரியவை) என்ன? எனக் கேட்டார் அ(தற்க)வர்கள்,

((قُلْ: اللَّهُمَّ اغْفِرْ لِي، وَارْحَمْنِي، وَاهْدِنِي، وَارْزُقْنِي))

அல்லாஹும்மஃக் ஃபிர்லீ, வர்ஹம்னீ, வஹ்தினீ, வர்ஜுக்னீ என்று கூறுவீராக ! என்று கூறினார்கள்.

பொருள் : யா அல்லாஹ்! எனது பாவம் பொருத்தருள்வாயாக! எனக்கு நீ அருள் செய்வாயாக! எனக்கு நேர்வழி காட்டுவாயாக! எனக்கு வாழ்வாதாரங்களை நல்குவாயாக!
நூல்கள் : முஸ்லிம் 4 / 2072, இன்னும் அபூதாவூதில் அந்தக் கிராமவாசி திரும்பிச் சென்ற போது தன்னிரு கைகளிலும் நன்மையை நிரப்பிக்கொண்டு விட்டார். அவர் என்று ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். 1 /220

(263) 10. ஒருவர் இஸ்லாத்தைத் தழுவி விடும் போது அவருக்க நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், தொழுகையைக் கற்றுக் கொடுத்து விட்டு பின்னர்,

263-(10) كَانَ الرَّجُلُ إِذَا أَسْلَمَ عَلَّمَهُ النَّبِيُّ صلى الله عليه وسلم الصَّلاَةَ ثُمَّ أَمَرَهُ أَنْ يَدْعُوَ بِهَؤُلاَءِ الْكَلِمَاتِ: ((اللَّهُمَّ اغْفِرِ لِي، وَارْحَمْنِي، وَاهْدِنِي، وَعَافِنِي وَارْزُقْنِي))

அல்லாஹும்ம ஃக் ஃபிர்லீ, வர்ஹம்னீ, வஹ்தினீ, வ ஆஃபினீ வர்ஜுக்னீ என்ற இவ்வார்த்தைகளைக் கூறி பிரார்த்திக்குமாறு அவருக்குக் கட்டளையிட்டார்கள்.
நூல் : முஸ்லிம் 4 / 2073 முஸ்லிமுக்குரிய மற்றொரு அறிவிப்பில் நிச்சயமாக இவை உம்முடைய இம்மை மற்றும் மறுமையை உமக்கு ஒருங்கி ணைத்துள்ளது.

(264)11. நிச்சயமாக மிகச் சிறந்த துஆ, الْحَمْدُ لِلَّهِ அல்ஹம்துலில்லாஹ்வாகும் மற்றும் கூறப்படுபவற்றில் மிகச் சிறந்தது, لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ லாயிலாஹ இல்லல்லாஹுவாகும்.

264-(11) ((إِنَّ أَفْضَلَ الدُّعَاءِ الْحَمْدُ لِلَّهِ، وَأَفْضَلَ الذِّكْرِ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ)).

நூல் :அத்திர்மிதீ 5 /462 இப்னுமாஜா 2 / 1249 ஹாகிம் 1 / 503ல் பதிவு செய்து, அதனை சரியானதெனவும் கூறியுள்ளார்கள். தஹபீ அவர்கள் அதற்கு ஒப்புதலும் தெரிவித்தள்ளார்கள். ஸஹீஹுல் ஜாமிஉ 1 / 362 காண்க!

265-(12) ((الْبَاقِيَاتُ الصَّالِحَاتُ: سُبْحَانَ اللَّهِ، وَالْحَمْدُ لِلَّهِ، وَلاَ إِلَهَ إِلاَّ اللَّهُ، وَاللَّهُ أَكْبَرُ، وَلاَ حَوْلَ وَلاَ قُوَّةَ إِلاَّ بِاللَّهِ))

(265) 12. நிலையான நல்லவைகள், ஸுப்ஹானல்லாஹி வல்ஹம்து லில்லாஹி, வலா இலாஹ இல்லல்லாஹு வல்லஹு அக்பர், வலா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹி.

நூல் : அஹ்மது ஷாகிர் அவர்களுடைய அமைப்பின்படி அஹ்மது 513 இலக்கமிட்டு அதன் அறிவிப்புத் தொடர் சரியானதாகும் மஜ்மஉஜ் ஜவாயிது 1 /297ம் காண்க! புலூகுல் மராமில் இப்னு ஹஜர் அவர்கள் அபூஸயீது டைய அறிவிப்பிலிருந்து நஸாயீயின் பால் இணைத்துக் கூறிவிட்டு, இப்னு ஹிப்பான் மற்றும் ஹாகிம் சரியானதெனக் கூறியதாகவும் கூறியுள்ளார்கள்.

### 131 – كَيْفَ كَانَ النَّبِيُّ صلى الله عليه وسلم يُسَبِّحُ؟

### 131. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எவ்வாறு தஸ்பீஹ் செய்து வந்தார்கள்?

266- عَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرٍو رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: ((رَأَيْتُ النَّبِيَّ صلى الله عليه وسلم يَعْقِدُ التَّسْبِيحَ)) وفي زيادة: ((بِيَمِينِهِ))

(266) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தஸ்பீஹை தங்களது வலக்கையால் எண்ணு பவர்களாக இருக்க நான் கண்டேன் என்று அப்துல்லாஹ் பின் அம்ரு ரளியல்லாஹு அன்ஹுமா அவர்கள் அறிவித்துக் கூறுகிறார்கள்.
நூல்கள் : இதனை அபூதாவூது 2 / 81ல் இதே வாக்கியத்துடன் பதிவு செய்துள்ளார்கள். திர்மிதீ 5 / 521 ஸஹீஹுல் ஜாமிஉ 4 / 271 -4865 இலக்கத்தில் காண்க!

## 132 - مِنْ أَنْوَاعِ الْخَيْرِ وَالآدَابِ الْجَامِعَةِ

## 132. பலதரப்பட்ட நன்மைகள் மற்றும் ஒழுக்கம் பேண துஆ

267- قَالَ النَّبِيُّ صلى الله عليه وسلم ((إِذَا كَانَ جُنْحُ اللَّيْلِ - أَوْ أَمْسَيْتُم - فَكُفُّوا صِبْيانَكُم، فَإِنَّ الشَّيَاطِينَ تَنْتَشِرُ حِينَئِذٍ، فَإِذَا ذَهَبَ سَاعَةٌ مِنَ اللَّيلِ فَخَلُّوهُمْ، وَأَغْلِقُوا الأَبْوَابَ وَاذْكُرُوا اسْمَ اللَّهِ؛ فَإِنَّ الشَّيطَانَ لاَ يَفْتَحُ بَاباً مُغْلَقاً، وَأَوْكُوا قِرَبَكُمْ، وَاذْكُرُوا اسْمَ اللَّهِ، وَخَمِّرُوا آنِيَتَكُم، وَاذْكُرُوا اسْمَ اللَّهِ، وَلَوْ أَنْ تَعْرُضُوا عَلَيْهَا شَيْئاً، وَأَطْفِئُوا مَصَابِيحَكُمْ))

(267) இரவு தொடங்கி விடும் பொழுது அல்லது நீங்கள் மாலைப் பொழுதை அடைந்து விடும் பொழுது உங்களுடைய சிறார்களைத் தடுத்து வையுங்கள். ஏனெனில் நிச்சயமாக ஷைத்தான்கள், அது சமயத்தில் பரவி விடுகின்றனர். ஆகவே இரவில் கொஞ்ச நேரம் சென்று விடுமேயானால்(சிறார்களான) அவர்களை (வெளியே செல்ல)விட்டுவிடுங்கள்!

வாயில்களை அடைத்தும் விடுங்கள்! அல்லாஹ்வின் பெயரையும் கூறுங்கள்! ஏனெனில் (இவ்வாறாக) மூடப்பட்ட வாயில்களை ஷைத்தான் திறக்கமாட்டான் உங்களுடைய தண்ணீர்ப் பைகளை (தண்ணீர் இருக்கும் பாத்திரங்களை) யும் அவற்றின் மேல் எதையாவது குறுக்கே வைத்து மூடி விடுங்கள் உங்களுடைய விளக்குகளையும் அணைத்து விடுங்கள். அல்ஹதீஸ் நூல்கள் : ஃபத்ஹுடன் புகாரீ 10 / 88 முஸ்லிம் 3 / 1595

அல்லாஹ் நம்முடைய நபி முஹம்மது, அன்னாரின் குடும்பத்தினர், அன்னாரின் தோழர்கள் ஆகிய அனைவரின் மீதும் அருளும் செய்து சாந்தியையும் நல்கி பரகத்து களையும் நல்குவானாக!

وَصَلَّى اللَّهُ وَسَلَّمَ وَبَارَكَ عَلَى نَبِيِّنَا مُحَمَّدٍ وَعَلَى آلِهِ وَأَصْحَابِهِ أَجْمَعِينَ.

## இணைப்பு

சூரிய, சந்திர கிரகணம் ஏற்படும் போது ஓதப்படும் துஆ

நீங்கள் கிரகணத்தை கண்டால் அல்லாஹ்விடம் துஆ செய்யுங்கள் கிரகணம் விலகும்வரை தொழுங்கள் என்று நபி (ஸல்) கூறினார்கள்.
அறிவிப்பவர் : முகீரா இப்னு ஷுஃபா (ரலி) நூல் : புகாரீ

நபி (ஸல்) அவர்கள் காலத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டது, நபி (ஸல்) அவர்கள் எழுந்து மக்களுக்கு தொழுவித்தார்கள். நீண்ட நேரம் ஒதினார்கள். நீண்ட நேரம் ருகூவும் செய்தார்கள். பிறகு தலையை உயர்த்தி மீண்டும் நீண்ட நேரம் ஓதினார்கள். இது முதலில் ஓதியதை விட குறைவானதாக இருந்தது. பிறகு மீண்டும் நீண்ட நேரம் ருகூவுச் செய்தார்கள் இது முதல் ருகூவை விட குறைவானதாக இருந்தது. பிறகு தலையை உயர்த்தி

இரண்டு ஸஜ்தாக்கள் செய்தார்கள். பின்னர் எழுந்து இரண்டாம் ரக்அத்திலும் இவ்வாறு செய்த தொழுகை முடிந்த பின்னர் எழுந்து (மக்களை நோக்கி) எவரது மரணத்திற்காகவோ வாழ்விற்காகவோ சூரியனுக்கும், சந்திரனுக்கும் கிரகணம் பிடிப்பதில்லை. அவ்விரண்டும் அல்லாஹ்வின் அத்தாட்சிகளில் உள்ளவையாகும். அவற்றைத் தனது அடியார்களுக்கு அல்லாஹ் காட்டுகிறான். எனவே கிரகணத்தை நீங்கள் காணும் போது தொழுகைக்கு விரையுங்கள் என்று கூறினார்கள். அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி) , நூல் : புகாரீ

நபி (ஸல்) காலத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டபோது அழைப்பாளர் ஒருவரை அனுப்பி "அஸ்ஸலாது ஜாமிஆ ' என்று மக்களை அழைக்குமாறு நபி (ஸல்) கூறினார்கள்.
அறிவிப்பவர் : அப்துல்லா இப்னு அம்ரு, நூல் : முஸ்லிம்

நபி (ஸல்) அவர்கள் காலத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டபோது இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள்.
அறிவிப்பவர் : அபூபக்கர் (ரலி) நூல்: புகாரீ

சூரிய கிரகணம் ஏற்பட்ட போது நபி (ஸல்) அவர்கள் கியாமத்து நாள் வந்துவிட்டதோ என்று அஞ்சி திடுக்கிட்டு எழுந்தார்கள். உடனே பள்ளிக்கு வந்தார்கள். தொழுகையை நீட்டி தொழுதார்கள். அடியார்களை எச்சரிப்பதற்காக அல்லாஹ் அனுப்புகிறான். இவற்றில் எதேனும் நீங்கள் கண்டால் இறைவனை நினைவுக் கூர்ந்து பிரார்த்தித்து பாவமன்னிப்பு தேடுங்கள் என்று கூறினார்கள். அறிவிப்பவர் : அபூமூஸா (ரலி) நூல்: புகாரீ

## மொழி பெயர்த்தோன் உரை

அகிலத்தாரின் இரட்சகன், அருளாளன், பேரன்பு கொண்டவன், சகலசக்தன், உயர்வுடையவன், செவியேற்பவன், அழைப்பவர்களின் அழைப்புக்கு பதில் கூறுபவன், அருகில் இருப்பவன் ஆகிய அவனுக்கே புகழ் அனைத்தும் உரித்தாகுக!

அகிலத்தார்க்கு அருளாக அனுப்பப்பட்ட இறுதித்தூதர் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீதும் அவர்களுடைய குடும்பத்தினர், தோழர்கள் இறுதிநாள் வரை நல்லவற்றில் அவர்களை பின்பற்றுவோர் ஆகியோர் மீதும் அல்லாஹ்விடமிருந்து சாந்தியும் பேரருளும் பொருத்தமும் உண்டாவதாக!

அல்லாஹ்வைப் புகழ்ந்து அவனுடைய நபி அவர்கள் மீது ஸலவாத்தும் கூறிய பிறகு! மனிதர்களுக்கு சிரமங்கள், இடையூறுகள், சங்கடங்கள், துன்பங்கள், துயரங்கள், பீதி, பயம் ஆகியவை ஏற்படுகின்றபோது அவற்றிலிருந்து விடுபட ஏதேனும் உபகரணங்களைச்செய்து தங்களை பாதுகாத்துக்கொள்ள முயற்சிக்கின்றனர். அவை அல்லாஹ்வின் வேதம் மற்றும் அவன் தூதரின் வழிகாட்டல்களுக்கு முரண்பட்டதாக இருப்பினும் சரியே! ஆனால் அல்லாஹ்வை இரட்சகனாக, முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை நபியாக, இஸ்லாத்தை மார்க்கமாக ஏற்றுக்கொண்டவருக்கு அது உரியதோ, உகந்ததோ அல்ல, என்பதைக்கூட புரிந்து கொள்ள முடியாத நிலைக்கு, தள்ளப்பட்டுள்ளவர்களே நம்மவர்களில் ஏராளம்! இந்நிலையிலிருந்து முஸ்லிம் சகோதரர்கள் விடுபட்டு நபி வழியில் வந்துள்ள திக்ருகளை - கூறப்படுபவைகளை கூறுவதன் மூலம் இன்னும் பிரார்த்தனைகளை செய்வதன் மூலம் சகலவற்றிற்கும் நிவாரணமுண்டு, இம்முறையை தனதாக்கிக்கொண்டவர் தனக்கு வந்த இன்னல்களை போக்கிக்கொள்ள, தனக்குத்தெரியாது வர இருக்கும் தீமைகளிலிருந்து பாதுகாப்பும் பெறும் வழியை உண்டாக்கிக் கொள்ள முடியும், என்ற நிதர்சனமான வழிமுறையை அகிலத் தார்க்கு அருளாக அனுப்பப்பட்ட அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கற்றுத்தருகிறார்கள், அவ்வழிமுறையை ஒரு தொகுப்பாக அமைத்து அதிகாலையில் ஒருவர் தூக்கத்திலிருந்து எழுந்தது முதல் மீண்டும் தூங்கச்செல்லும் வரை ஏற்பட இருக்கும் ஒவ்வொரு நிலைக்குத்தக்கவாறு கூற மற்றும் பிரார்த்திக்க, ஓதிப் பார்த்துக்கொள்வதன் மூலம் பிணி தீர்ந்து ஆரோக்கியம் பெற கிட்டத்தட்ட 267 பிரார்த்தனைகளை ஒருங்கிணைத்துத் தொகுத்து, அதற்கு ஹிஸ்னுல் முஸ்லிம்" எனப்பெயரிட்டு சகோதரர் சயீது பின் அலீ பின் வஹ்ஃப் அல் கஹ்தானீ என்பவர் வழங்கியுள்ளார். அல்லாஹ் அவருக்கு நற்கூலி வழங்குவானாக!

அன்றுமுதல் இன்றுவரை இந்நூல் இலவசமாகவே ஒரு லட்சத்திற்கும் அதிகமான பிரதிகள் அச்சிட்டு உலகமெங்கும் வாழ்கின்ற தமிழ் முஸ்லிம் சகோதரர்களுக்கு விநியோகம் செய்யப்பட்டுள்ளது.

தமிழ்நாட்டில் 'அமீன் ' வெளியீட்டாளர் கிட்டத்தட்ட பலமுறை வெளியிட்டுள்ளதும் பாராட்டுக்குரியது. இப்போது உங்கள் கரங்களில் புதிய பொலிவில் காட்சி தரும் இந்நூல் துபை இஸ்லாமிக் இன்பர்மேஷன் மையத்தின் சார்பாக இலவசமாக அச்சிட்டு விநியோகம் செய்யப்பட்டதாகும். இதை அரபி மற்றும் தமிழில் ஜாமிய்யத் பிர்தவ்ஸியா அரபிகல்லூரி ஆசிரியர் அன்புச்சகோதரர் ந. செய்யித் அலி ஃபைஸி அவர்கள் கணினியில் அழகிய முறையில் ஒளி அச்சுக்கோவை செய்து தந்தார்கள், அவர்களுக்கும் இந்நூலை பலமுறை படித்து சிறப்பான முறையில் அச்சிட உதவிய சென்னை சகோதரர் அப்துஷ்ஷுகூர் அவர்களுக்கும் அன்று முதல் இன்றுவரை இந்நூல் வெளிவருவதற்கு காரணமாக இருந்த அனைவருக்கும் நன்றி கூறி, அவர்களுக்கு அல்லாஹ் நற்கூலி வழங்குவானாக! என பிரார்த்தித்து நிறைவு செய்கிறேன்.

அன்புடன்

ஓ.முஹம்மத் இக்பால் மதனீ

## மூல நூலாசிரியர் உரை

நிச்சயமாக புகழ் அனைத்தும் அல்லாஹ்விற்கே! அவனை நாம் புகழ்கிறோம்; அவனிடமே உதவியும் தேடுகிறோம்; அவனிடமே பாவம் பொருத்தருளவும் வேண்டுகிறோம்; மேலும், நம்முடைய மனதின் தீமைகள் மற்றும் நம்முடைய செயல்களில் கெட்டவைகளிருந்து அல்லாஹ்வைக் கொண்டு நாம் காவல் தேடுகிறோம்; எவரை அல்லாஹ் நேர்வழியில் செலுத்தி விட்டானோ, அவரை வழிகெடுப்பவர் (எவரும்) இல்லை; இன்னும் அவன் நேர்வழி செலுத்தாதவருக்கு - அவருக்கு நேர்வழி காட்டுபவர் எவரும் இல்லை; மேலும், வணங்கப்படுபவன் அல்லாஹ்வையன்றி (வேறு) யாருமில்லை; அவன் தனித்தவன், அவனுக்கு இணை இல்லை என்று நான் சாட்சி கூறுகிறேன், நிச்சயமாக முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவனுடைய (உரிய) அடியார் மற்றும் அவன் தூதர் என்றும் நான் சாட்சி கூறுகிறேன், அவர்கள் மீது மற்றும் அவர்களுடைய குடும்பத் தினர், இன்னும் அவர்களுடைய தோழர்கள் மறுமை நாள் வரை அவர்களை அழகானவற்றில் பின்பற்றியோர் மீதும் அல்லாஹ் அருள் செய்து அநேக சாந்தாகளையும் நல்குவானாக!

அல்லாஹ்வைப் புகழ்ந்து அவனுடைய நபி அவர்கள் மீது ஸலவாத்தும் கூறிய பிறகு: "நினைவு கூர்தல், பிரார்த்தனை செய்தல், (அல்லாஹ்வின்) வேதம் மற்றும் (அவனுடைய) நபி வழி முறையில் ஓதி பார்த்து வைத்தியம் செய்தல்" ஆகியவற்றைக் கொண்ட என்னுடைய நூலிலிருந்து அதை நான் சுருக்கிக் கொடுத்த ஒரு சுருக்கமே இதுவாகும்.

பயணங்களில் எடுத்துச் செல்ல எளிதாக இருப்பதற்காக கூறப்படுபவற்றின் பகுதியை அதில் நான் சுருக்கித் தந்துள்ளேன்; கூறப்படுபவற்றின் மூல வார்த்தைகளைக் கொண்டு மூலத்தில் காணப்பட்ட ஒரு அடிப்படை அல்லது இரு அடிப்படைகளைக் கூறுவது கொண்டும் போதுமாக்கிக் கொண்டுவிட்டேன்; எவரேனும் நபித் தோழரின் பெயரையோ மற்ற எந்த நூல்களில் பதிவாகியுள்ளது என்பதையோ தெரிந்து கொள்ள நாடினால் மூலத்தை அவர் பார்த்துக் கொள்ளவும்.

கண்ணியம் மற்றும் மகத்துவத்திற்குரிய அல்லாஹ்விடம் அவனுடைய அழகான பெயர்கள் மற்றும் அவனுக்குரிய உயர் பண்புகளைக் கொண்டு (நான் தொகுத்தளித்த) அதை சங்கை மிகுந்த அவனுடைய முகத்திற்காக ஆக்கியருளுமாறும் அதனால் என் ஜீவியம் மற்றும் என்னுடைய இறப்பிற்குப் பிறகும் எனக்குப் பயனுள்ளதாக ஆக்கியருளுமாறும், இன்னும் அதை படித்தவர் அல்லது அதைப் பிரசுரித்தவர் அல்லது அதை வெளியிடக்காரணமாக இருந்தவர் ஆகியோருக்கும் பயனுள்ளதாக ஆக்கித் தரவும் அல்லாஹ்விடம் கேட்கிறேன்;

நிச்சயமாகத் தூயவனாகிய அவன், அதன் காரியஸ்தன் மற்றும் அதற்கு ஆற்றலுடையவனாவான். இன்னும் அல்லாஹ் நம்முடைய நபி முஹம்மது (ஸல்) மீது, அவர்களுடைய குடும்பத்தினர், அவர்களின் தோழர்கள் மற்றும் மறுமை நாள் வரை அழகானவற்றில் அவர்களைப் பின்பற்றியோர் ஆகியோர் மீது அருள் செய்து சாந்தியையும் நல்குவானாக!

தொகுத்தளித்தவர்,

சயீது பின் அலீ பின் வஹ்ஃப் அல் கஹ்தானீ (ஸஃபர் மாதம் 1409 ஹிஜ்ரியில் எழுதப்பட்டது) .

# حصن المسلم

## من أذكار الكتاب والسنة

الفقير إلى الله

سعيد بن علي بن وهف القحطاني

ترجمة إلى اللغة التاملية

الشيخ محمد إقبال مدني

வெளியிட்டோர் :

மதனீ வெளியீட்டகம்

S.A.R. மன்ஸில்

43 D, தர்மலிங்கம் தெரு,

மணப்பாறை - 621 306.